உ



ருதுவான

# பிராமணப் பெண்களின்
# விவாகம் சாஸ்திரீயமானது



என்பதைப் பற்றிய வியாசம்.

இது

சென்னை ஹிந்து சமாஜத்தார் வேண்டுகோளுக்கிணங்க

**வி. எஸ். ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார்**

எழுதிய ஆங்கில வியாசத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு.

"மெய் உரை; அறஞ்செய்."
"ஸத்தியம் வத; தர்மம்சர."

சென்னை,
**ஜி. ஏ. நடேசன் அண்டு கம்பெனி.**
1908.
(இதன் விலை 4-அணா.)

## மொழிபெயர்ப்பு ஆசிரியர் முகவுரை.

———: o :———

சென்னை ஹிந்து சமாஜத்தார் வேண்டுகோளுக்கிணங்க, இப்புஸ்தகம் ஆங்கிலத்தினின்றும், ஜனோபகாரமார்த்தமாக, எளிய தமிழ் நடையில் என்னால் மொழிபெயர்க்கப் பெற்றது.

அறிவுடையார் இதிற்காணும் குற்றத்தை நீக்கிக் குணத்தைக் கொள்ளுவாராக.

குறிப்பு.—ஆங்கிலபுஸ்தகத்தில் இருக்கின்ற அநுபந்தம் (Appendix). இதனுடன் அச்சியற்றப்படவில்லை

மதுரை,
கீலக௵ ஆனிமீ 13உ

ப. நாராயணன்.
மதுரை.

உ

# முகவுரை.



1906-௵த்தின் தொடக்கத்தில் சென்னை ஹிந்து சமாஜத்தின் அங்கத்தினர் ஒருவர் "ருதுவான பிராமணப்பெண்களின் விவாகம் சாஸ்திரீயமானது" என்பதைப்பற்றி உயர் வான வியாசம் எழுதுபவருக்கு ரூ. 100. பரிசு அளிப்பதாகத்தெரிவித்தார். அதன்மீது வர்த்தமான பத்திரிகைகளின் மூலமாய் இவ்விஷயம் அறிவிக்கலாயிற்று. 24 வியாசங்கள் பல பெயர்களால் எழுதப்பட்டன. கனம்தங்கிய. பி. எஸ். சிவஸ்வாமி ஐயர், ராவ்பகதூர். எம். ரெங்காசாரியார், கனந்தங்கிய வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் இவர்கள ஒரு சிறு சபையாகக்கூடி இந்த வியாசங்களைப் பரிசீலனை செய்தார்கள். கர்னூலில் வசிக்கும முதலாவது கிரேட்பிளீடர் மகா-௱-௱-ஸ்ரீ. வரத ஐயங்கார் எழுதிய வியாசமானது உயர்வானதென்று நன்குமதிக்கப்பட்டுப் பரிசுக்கு யோக்கியமாக தெரிந்தெடுக்கப்பட்டது. பின்பு, அவருக்குப் பரிசு கொடுக்கப்பட்டது. பல வியாசங்களைப் பார்வையிட்டதில் அவைகளின் சாராம்சங்களை ஒருங்கு சேர்த்து யாவரும் எளிதில் அறியும்படி ஒரு புஸ்தகமாக எழுதி வெளியிட்டால் நலமாமென ஹிந்து சமாஜத்தார் அபிப்பிராயப்பட்டார்கள். ஸம்ஸ்

கிருத ஆங்கில பாஷைகளில் நல்ல பயிற்சியுள்ள மகா-ா-ா-ஸ்ரீ. வி. எஸ். ஸ்ரீநிவாச சாஸ்திரியாரை இப்புஸ்தகம் எழுதும்படி ஷை சபையார் கேட்டுக் கொண்டார்கள். அவ்விதம் அவர் இப்புஸ்தகத்தை ஆங்கிலத்தில் எழுதினார்.

இது ஜனங்களுக்கு உபயோகமாகுமென்று முதலில் ஆங்கிலத்திலும் இப்போது, தமிழிலும் பிரசுரம்செய்யப்படலாயிற்று. கன்னிகைகளின் விவாகம் நவீனமானது என்றும், பண்டைக்காலத்தில், ருதுவான பெண்களுக்கே விவாகம் நடைபெற்று வந்ததென்றும் நம் தேசத்தின் ஹிந்து சாஸ்திரங்களைப் பக்ஷபாதமின்றி நடுநிலைமையான புத்தியுடனே வாசிப்பவர்களுக்குத் தெளிவாய்ப் புலப்படும். பிராசீன வழக்கங்களையும் ஆசாரங்களையும் அதிக விசுவாசத்துடனே நாம் மதிக்கின்றோம். அப்படி யிருப்பினும் பிராசீன நல்ல ஆசாரத்தை விட்டு, நவீனமான தீமையக்கத்தக்க ஆசாரத்தை அனுஷ்டிக்க நேரிட்டது பெருவியப்பே. பிராசீன ஆசாரம், பாவம் அதிகரித்திருக்கின்ற இக்காலத்துக்குப் பொருந்தாதென்ற எண்ணமானது, நம்மவர்களுக்குள் இருக்கிறதானது அதிக விந்தையை உண்டு பண்ணுகின்றது. மாறிக் கொண்டிருக்கின்ற காலகதிக்குத் தக்கபடி, ஆசாரங்களும் பலவாறாக மாறுகின்றன, என்பதைப் பல ஆதாரங்கள் மூலமாக இப்புஸ்தகம் எடுத்துக்காட்டும். நம்மவர் மேன்மையை அடையவேண்டுமென விரும்புவோர்க்கு எம்முறைபற்றி ஒழுகினல், சாஸ்திரீயமாகவும் நேர்

மையாகவும் இருக்குமென்பதைக் காட்டக்கூடிய பல சாஸ்திர ஆதாரங்கள இப்புஸ்தகத்தில் விஸ்தாரமாக வரையப்பட்டுள்ளன. இந்த வியாசமானது பிராமணர்கள் சம்பந்தமாக ஏற்பட்டிருக்கிறது வாஸ்தவமே. ஆனால், அவர்களைப் பார்த்து ஏனைய ஜாதியாரும் அனேகமாக அவர்கள ஆசாரங்களை அனுஷ்டித்து வருகின்றார்கள. ஆகையால், பிராமணர்களுக்குள ஏற்பட்டுள்ள, சாஸ்திர சம்மதமில்லாத ஆசாரங்களை விசாரித்து பரிசுத்துக் காட்டுவோமாகில், அதன் மூலமாக, ஆசாரவிஷயங்களின் சீர்திருத்தம் நிகழ ஏதுவாக இருக்கும். அச்சீர் திருத்தம் பரவி, ஜன சமூகத்துக்கு நன்மை பயக்கும். விவாகவிஷயமல்லாமல், மற்றையத் துறைகளிலும் சீர்த்திருத்தம் உண்டாக ஒரு காரணமாகவும் ஏற்படுவதாகும் ஹிந்துக்களுடைய ஜனசார முறைகளைச் சீர்திருத்த வேண்டுவதைப்பற்றித் தேச அபிமானிகள பலர் சிந்தனை செய்து வருகிறார்கள். பெண்களை வாலிபத்திலேயே பள்ளிக் கூடத்தைவிட்டு விலக்குகிறதினால், நம்தேசத்தில் பெண் பாலர்களான பாதி ஜனங்கள் கல்வியின் பிரயோஜனத்தை அடையாமல் இருக்கநேரிடுகிறது. பெண்கள் 12-வயது ஆகுமுன் விதவைகளாக நேரிடும் கொடுமையான கதி வியசனிக்கத் தக்கது. பாலியர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் தேகசக்தியும், மனவலியும், வரவரக் குன்றி, நோய்மை யுள்ளனவாக ஆகின்றன. இன்னும் இவைபோன்ற அநேக தீமைகள், வாலிபத்திலேயே, விவாகத்தின் தர்மத்தையும்

உத்தரவாதத்தையும் அறியுமுன் விவாகம் நடக்கின்றமையால், உண்டாகின்றன இஃது அறிஞர்களின் அபிப்பிராயம். வியசனிக்கக்கூடிய இந்த ஆசாரம், எம்மாத்திரம் சாஸ்திர ஆதாரமுடையது என்பதை நம்மவர் அறியும் வண்ணம் இப்புஸ்தகம் பிரசித்தம் செய்யப்பெற்றது. இது நம்மவர்கள் கண்ணைத் திறக்கும் என்று நம்புகிறோம். அதன் பிறகாவது நாம் மேன்மேலும் அபிவிருத்தியாகவும் மஹிமையை அடையவும் சாதகமான பூர்விக உயர்ந்த ஆசாரத்தை நம்மவர் திரும்பவும் அனுஷ்டிப்பாராக. இக்காலத்திலும் சாஸ்திரத்திற்கு விரோதமாகப் பல விவாகங்கள் நடத்தப்பெறுகின்றன என்பது பிரசித்தமே. ருதுவான பிராமணப் பெண்ணுக்கு விவாகம் ஏற்படுமானால், அது, கோர்ட்டுகளில், அயுக்தம், அசாஸ்திரீயமென்று, ஒரு காலும் தீர்மானிக்கப் படமாட்டாது. சரியான வரன் கிடைக்கிறதில் ஏற்படும் கஷ்டம் கிரமங்களை உத்தேசித்து, அதிக வயதுவரையில், விவாகம் இப்போது தாமசிக்கப்படுகிறது. பண்டிதர்களும், புரோகிதர்களும், எந்த அபிப்பிராயம் கொண்டபோதிலும், அதற்கு விரோதமாக இப்படி நடக்கிறது. சிலர் ஒன்றுகூடி, வைதிகர்களின் முக்கியஸ்தர்களைச் சேர்த்துக்கொண்டு, அவர்களை நடத்துவார்களானால், பிரயோஜனமாக இருக்கும். விவாகத்தை ருதுவான பிறகு செய்தலே நலமெனத் தீர்மானித்து அந்தப்படி விவாக சீர்திருத்தம் நடைபெறுமாகில் அது பரமசாதகமாகவும் மற்றைய சீர்

திருத்தங்களுக்கு முக்கியமான ஆதாரமாகவும் ஏற்படும்.

திவான்பகதூர் ரகுநாதராயர் அவர்கள், அநேக வருஷங்களாக, நம்முடைய தற்கால ஆசாரங்களின் கொடுமையைச் சாஸ்திரங்களின் மேல் சுமத்துதல் நியாயமன்று என்று பலமுறை ஒரே பிடியாகச் சாதித்ததின் உண்மை இப்போது நாம் நன்றாய் அறியக் கூடியதே. அவர்கள் செய்த வேலை எல்லாரும் மெச்சத் தக்கதே. ஹிந்து சாஸ்திரங்களை யதார்த்தமாக் அறிந்தால், விவாகம், ஸ்திரீகளுக்குக் கட்டாயமன்று என்றும், ருதுவாகு முன் கன்னிகைகளை விவாகம் செய்யக்கூடாதென்றும் நன்றாய்த் தெரியவருமென இடைவிடாமல் அவர்கள் அபிப்பிராயம் சாதித்தார்கள். வெகுநாளாகச் செய்துகொண்டு வந்த அவர்களுடைய பலமான முயற்சியின் பலனைத் தாமே நேரில் பார்க்கும்படியான பாக்கியம் அவர்களுக்கு ஒருகால் கிடைக்காமல் போனாலும் போகும். ஆனால் அவர்கள் ஆரம்பித்த முயற்சியைக் கைசோராமல் நடத்தி வரவும் முடிவுக்குக் கொண்டுவரவும் மற்றவர்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள். நாம் மாத்திரம் பிடிவாதமாக முயன்றால் எல்லாத் தடைகளும் ஆக்ஷேபணைகளும் வரவர விலகிப்போகும். ஹிந்து சமாஜத்தாருக்கு வேண்டுமென்று, வீணான மாறுதலைச் செய்யக் கருத்தில்லை. மேற்கு நாட்டார்களின் நாகரிகத்தை அனுசரித்து, நம்மவரும் நம்மாசாரங்களின் மாறுதலை உண்டு பண்ணிக்கொள்ள வேண்டுமென்ற எண்ணமும்

அவர்களுக்கு இல்லை. சாஸ்திர ஆதாரமில்லாதனவும் நீதிமுறையுடன் நோக்கமில்லாதனவுமான சில தீய ஆசாரங்களை ஏற்பட்டு, ஹிந்து நாகரிகமேம்பாட்டைக் கெடுத்தும் லோபமடையவும் செய்துவிட்டன. தீயவும் குற்றமுமான ஆசாரங்களை கொஞ்சமேனும் நம்மை விட்டு நீங்கி, நன்மையான பூர்விக உயர்ந்த ஆசாரங்கள் திரும்பவும் சமயங்களுக்குள் நடை பெறுமாகில் ஹிந்து சமாஜம் ஏற்பட்டதின் நோக்கம் நிறைவேறியதாகும்.

# ருதுவான பிராமணப் பெண்களின் விவாகம்.

— o —

## இப்புஸ்தகத்தின் நோக்கம்

ருதுவான பிராமணப் பெண்களின் விவாகம் சாஸ்திர நிஷித்தமானதுமன்றி ஒரு காலத்திலும் உபயோகத்தில் இருந்ததேயில்லையென்று வைதிகர்கள் வாதிக்கிறார்கள். அப்படி வாதம் செய்வது பிசகு என்று ருசுப்படுத்துவதே இச்சிறு புஸ்தகத்தின் நோக்கம். இவ்விஷயமாய்ப் பூர்விக ஆதாரங்களை நிஷ்பக்ஷமாய்ப் பரிசீலனைசெய்து பார்க்குமிடத்தில் ஆதியில் பிராமணப் பெண்கள் ருதுவான பிறகே விவாகம் செய்யப்பட்டார்கள் என்பதற்கு ஏராளமான சாக்ஷியங்கள் ஏற்படுகின்றன. இவ்விஷயத்தை ஆக்ஷேபிக்க முடியாவண்ணம் சித்தாந்தப் படுத்துவதற்கு இவைகளே போதுமானவை. நாம் சாதாரணமாய் நினைப்பதைக் காட்டிலும் வெகு காலத்துக்கு முன்னமேயே ருதுவாகாத கன்னிகைகளுக்கு விவாகம் நடந்து வந்தது என்பதற்குச்சில அறிகுறிகள் காணப்படினும் அவ்வழக்கம் பிற்காலத்தது என்பதும் அதற்குச் சில சாஸ்திர ஆதாரங்கள் இருப்பினும் அவை அதற்கு எதிர்க்கக்ஷி ஆதாரங்களுடன் பரிமாணத்திலாவது பலத்திலாவது சிறிதும் ஒப்பிடக்கூடாதது என்பதும் வெளியாகும்.

---

# 1. விவாஹ கிரியையின் பழமை

மானுஷீகமான ஒவ்வொன்றும் மாறும்பொழுது கிரியையும் மிகவும் மெதுவாய் மாறுகின்றது. பூர்வீகமாய் ஏற்பட்ட கிரியையின் அர்த்தம் மறக்கப்படலாம். அஃது ஏற்பட்ட நோக்கம் மாறிப்போயிருக்கலாம். அதன் கருத்தும் சரியாயும் கேலிக்கிடமாகும்படி பிசகாயக் கிரகிக்கப்பட்டிருக்கலாம். இருந்தாலும் சில சமயங்களில் ஆசார அனுஷ்டானங்களைக் கைக்கொள்வதற்கும், சிலசமயங்களில் பரம்பரையான வழக்கத்தை நீக்கிவிட்டால் பாவம் சம்பவிக்குமோ என்று மதப்பற்றுள்ள மனத்துக்கு உண்டாகும் பீதியைத் தணிப்பதற்கும், பழைய ஏற்பாட்டையே நாம் அநுசரிக்கிறோம். வாஸ்தவமானவைகள் மறைந்துபோன வெகு காலத்துக்குப் பிறகும் யாதொரு அர்த்தமில்லாத இவ்வழக்கங்களைவிடாமற் பற்றிக்கொண்டிருக்கும் சுபாவம் மற்றைப் பூர்வீக ஜாதியாரைக்காட்டிலும் ஹிந்துக்களுக்குள் அதிகமாக உள்ளது என்பது விளங்குகின்றது. நம் மதக்கொள்கைகளும் ஆசார விஷயங்களும் வெகுவாய் மாறியிருந்தாலும் தற்கால அநுஷ்டானத்திலிருந்து வருகிற நம் கிரியைக்கும் ரிஷிகளின் கிரியைகளுக்கும் சிறிதும் வித்தியாசமில்லாதபடி ஒரேமாதிரியாயிருப்பது உண்மையிலேயே ஓர் ஆச்சரியமே.

ஆசார விஷயமாகவும் பௌதிக விஷயமாகவும் சீதோஷ்ண விஷயமாகவும் நம்மைச் சூழ்ந்திருக்கிறவைகளும் நம் தத்துவசாஸ்திரம், ஒழுக்கம், உயர்வான

நோக்கங்களை, தொழில்களை, தேகக்கட்டு, ஆகார நியமம், உடைமுதலியவைகளும் எல்லாம், நம் முன்னோர்களுடைய அனுஷ்டானத்தினின்றும் நம்மைப் பிரத்தியேகமான ஜாதியாரென்று சொல்லத்தக்கவிதம், வெகு தூரம் மாறிவிட்டன. அவ்வாறிருந்தும் ஏற்றேறக்குறைய கி. மு 500 ம் வருஷங்களுக்கு முன் எழுதப்பட்ட கல்பஸூத்திரங்களுக்கு இணங்கவே நாம் விவாகமும் தகன ஸம்ஸ்காரமும், பிரார்த்தனையும், யாகமும் செய்கிறோம். அந்த ஸூத்திரங்கள் அவைகளின் முறையில் அதற்கு அநேக நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்த வழக்கங்களே அடங்கியவைகள்.

ஆகையால் நம்முடைய தற்கால பரிசீலனையில் விவாகக்கிரியைகளைப்பற்றியும் அவைகள் உபயோகப்படும் மந்திரங்களைப்பற்றியும் ஆராய்வதுபோல வேறெவையும் உண்மையாகவே அவ்வளவு உதவியுள்ளனவாக இரா.

இந்தக்கிரியை பலவித ஸூத்திரங்களுளும் சொற்பம் வேற்றுமையுடனும் பிராமணர்களுக்குள் ஒரே விதமாகவே இருக்கிறது. சொற்பவிதி விலக்குக்கள் தவிர பிரஹ்ம க்ஷத்திரிய வைசியர்களுக்கும் அநேகமாயப் பொதுவாயிருக்கின்றது. இப்படிப்பட்ட ஸூத்திரங்கள் பல. ஒவ்வொன்றுக்கும் சொந்தமான ஒரு கிருஹ்ய அல்லது கிரியாபுத்தகமுண்டு. இந்தப் புஸ்தகத்தில் ருக் வேதத்துக்குரிய **சாங்கியாயனம் ஆச்வலாயனம்** முதலிய விதிகளைப்பற்றியும் ஸாம வேதத்துக்

ரிய ஜைமினி கோபில, காதிர முதலியோர்களுடைய விதிகளைப்பற்றியும் சுக்ல யஜுர்வேதத்தைச்சார்ந்த காத்யாயனர், பாரஸ்கரர் முதலியோருடைய விதிகளைப்பற்றியும், க்ருஷ்ணயஜுர்வேதத்தைச்சார்ந்த மனு, போதாயனர், ஆபஸ்தம்பர், ஹிரண்யகேசின் என்பவர்களுடைய விதிகளைப்பற்றியும் குறிப்பிடப்படுகிற.

## 2. கிரியைகளின் பொதுதாற்பரியம்.

இந்த க்ருஹ்ய ஸூத்திரங்களெல்லாம் ஸ்நாதகனுக்குறித்தான விதிகளை ஏற்படுத்துகின்றன. ஸ்நாதகன் என்றால் வேதாத்தியயனம் முடிந்து க்ருஹஸ்தாச்ரமியினுடைய கடமைகளைப் பூர்த்தி செய்யத் தயாராய் இருக்கிற ஒரு பிரமசாரி.

பூர்வகாலத்திய க்ருஹஸ்தன் அவசியமாய்ச் செய்ய வேண்டிய கடமைகளில் முக்கியமானது தினந்தோறும் அக்னிஹோத்திரம்[1] நடத்தவேண்டியதே.

---

1. உதாரணமாக - ஆச்வலாயன - அத்தியாயம், கண்டிகா 9 ஸூத்திரம் 1—2.

पाणिग्रहणादि गृह्यं परिचरेत्स्वयं पत्न्यपि वा पुत्रः कुमार्यन्तेवासी वा । नित्यानुगृहीत स्यात् ।

ஆபஸ்தம்பா - படலம் 2, காண்டம் 5, சூத்திரம் 14—15.

समाप्यैतमग्निमुपहरन्ति । नित्यः ।

பாரஸ்கரா - காண்டம 1, கண்டிகா 9, சூத்திரம் 1.

उपयमनप्रभृत्यौपासनस्य परिचरणम् ।

அதற்கு அவன் பத்னி சகசரிணியாயிருத்தல் அவசியம். ஆகையால் எந்த அக்நியின்முன் விவாகம் நடந்ததோ அந்த அக்நி உடனே நாயகனுடைய கிருஹத்துக்குக் கொண்டுபோகப்பட்டுத் தம்பதிகளால் அணைந்து போகாதவண்ணம் காப்பாற்றப்படவேண்டும். இந்த வழக்கம் ஏற்பட்ட நிஷ்கபடமான காலத்தில் பெண்கள் கிருஹஸ்தரியின் கடமைகளைச் செய்யத் தக்கவர்களாயிருந்தாலொழிய அவர்கள் புதுக்குடும்பங்களுக்குப்போய் தங்கள் பர்த்தாக்களுடன் வசிக்கும்படி அனுப்பப்படுவார்களென்று எண்ணுவது யுக்தமாகுமா ?

விவாகக்கிரியைகளில் உபயோகப்படுத்தப்பட்ட மந்திரங்கள் முதல் முதல் ஏற்படுத்தப்பட்டு உபயோகப்படுத்தப்பட்ட பொழுதும் அர்த்தமில்லாத செத்தவிதிகளாயிருந்திருந்தாலொழிய தம்பதிகள் இருவரும் தக்க பருவமுள்ளவர்களாயிருக்கவேண்டும் என்று நிஸ்ஸந்தேகமாய் ருஜுக்கொடுக்கின்றன. அவை நேரிடப்போகிற தேகசம்பந்தத்தைக் குறித்தும், ஆண்சந்ததியைக் குறித்தும் புதுகிருஹத்தில் வதுவுக்குண்டான அதிகாரத்தைக் குறித்தும் பலமுறை பேசுகின்றன. பல இடங்களில் தேகசம்பந்தத்தைக் குறித்து விஷயங்கள் பச்சையாயும், காமபோகங்களை ஆவலுடன் எதிர்பார்க்கிற மனிதனால்மட்டுமே சொல்லக்கூடியவைகளாகவு மிருக்கின்றன. இதற்கு வைதிகர்கள் சொல்லும் மறுமொழி யென்னவென்றால் அம்மந்திரங்கள் வருங்காலத்தில் நடக்கப்போகிறவைகளைக் குறிக்கிற

வையாகவும் வது ,தக்க பருவமடைந்தபொழுது தனக் கும்தன் பாரியைக்கும் நடக்கக்கூடிய விஷயங்களைக்கல யாண காலத்தில வரன்சொல்லுகிறுன் என்றும் கூறு கிறுர்கள். அதனுல் பூர்வீக ரிஷிகள் மந்திரங்களை ஏற்படுத்திய காலத்தில தத்சமயத்துக்கு உபயோகப் படக்கூடிய மந்திரங்களை உண்டாக்கவில்லையென்றும் ஆனுல் குறைந்தபட்சம இரண்டு வருஷங்களுக்கு அப் பால் நடக்கக்கூடியவைகளையே கருத்துக் கொண்டார்களெ ன்றும் நாம் நம்பவேண்டியிருக்கிறது. (அதற்கிடை யில் எத்தனேயோ எதிர்பாராதசங்கதிகள நேரிடலாம்.)

பின்வரும் கிரந்தங்களால இச்சமாதானம் சிறிதும் நிற்கமுடியாதென்பது தெரியவரும். வேறுவிதமாகக் குறிக்கப்பட்டிருந்தாலொழிய அவை ஆபஸ்தம்ப கிருஹ்ய ஸூத்திரத்தினின்றும் எடுக்கப்பட்டிருக்கின் றன என்று அறியவும். எலலோரும் பொதுவாக வாசிக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் எழுதப்படுவ தால் வார்த்தைக்குச் சரியான வார்த்தையில்லாமல் கருத்தை முக்கியமாக அனுசரித்தே இம்மொழிபெயர் பபு எழுதப்படும்.

## 3. குறிப்பான மந்திரங்கள்.

பிரதம சங்கமத்தில் வதுவின் கிருஹத்தில் வரன் அவளை ஒவ்வொரு உறுப்பாகக் கூர்ந்து பார்த்து (**अघोर चक्षुरपतिघ्न्येधि**) சொல்லவேண்டியவைகளாவன. " என்னி லும் சாந்தமான பார்வையுடனும் சிநேகத்துடனும் இரு. எனக்கும் என் பந்துக்களுக்கும் நன்மை செய்

உன் ஹிருதயம் சாந்தமாகவும் உன் பார்வை பிரகாச, முடையதாகவும் இருக்கக்கடவது. ஜீவபுத்திரர்களைப் பெறு. தேவதைகளைப் பூஜி. நல்ல கீர்த்தியுள்ளவளாயிரு. என் வேலைக்காரர்களுக்கும் என் காலநடைகளுக்கும் நீ சந்தோஷத்தை யுண்டுபண்ணுவாயாக."

வதுவை விவாகம செய்துகொடுத்தப பிறகையில் அவள உறவினர் அழுங்கால வரன் சொலலுகிறதாவது: "அவர்கள் சநதோஷிக்க வேண்டியிருக்க அழுவானேன். இனி வெகு வருஷங்களாய நம்மிருவருக்கும் இருக்கும் நேசத்தைபபற்றி அவர்கள நினைக்கட்டும். நாம் **ஆலிங்கனம் பண்ணிக்கொள்ளும் வண்ணம்** அவர்களே இவ்விவாகத்தைச் செய்துவைத்தார்கள."

வதுவின் சிரசில் ஒரு சிறு தர்ப்பத்தைவைத்து அதன்மேல நுகத்தடியின் துவாரம்படும்படி வைத்து அந்தத் துவாரத்தில ஒரு சுவர்ணநாணயம் போடுவார்கள. அச்சமயத்தில் சொல்லப்படுகிற மந்திரத்தின் கடைசிபபாகம் என்னவெனில் "இந்தச் சொர்ணம் உனக்கு ஆசீர்வாதமாகப பலிக்கட்டும். அதன்மேல நான் வார்க்கிற இந்த ஜலம் உனக்கு ஆசீர்வாதமாகப் பலிக்கட்டும். இந்த நுகம் உனக்கு ஆசீர்வாதமாகப் பலிக்கட்டும். இந்த நுகத்தின் துவாரம் உனக்கு ஆசீர்வாதமாகப் பலிக்கட்டும். இந்தப் புனிதமான தீர்த்தம் உனக்குஆசீர்வாதமாகப்பலிக்கட்டும். (இனி நேரிடப் போகிற சம்சர்க்கத்தில்) நீ உன்னுடைய சரீரத்தை என்னுடைய சரீரத்துடன் சம்பந்தப்படுத்துவாயாக."

அதன்பிறகு வரன் வதுவைப்பார்த்துச் சொல்வது “ சோமன் முதலில் உன்னை அறிந்தான். பின் கந்தர்வன் உன்னையறிந்தான். உன் புருஷர்களில் மூன்றாம் வரன் அக்நி. மானுஷ புத்திரனாகிய நான் உனது நான்காம் புருஷன். ஸோமன் உன்னைக் கந்தர்வனுக்குக் கொடுத்தான். கந்தர்வன் உன்னை அக்நிக்குக் கொடுத்தான். அக்நி உன்னைச் சம்பத்தையும் சந்தானத்தையும் எனக்குக் கொடுத்தான்.” இந்தமந்திரம் முக்கியமானது. [2] வித்யாரண்ய ஸ்வாமிகளாகிய சாயனாசாரியார் அதனைப் பின்வருமாறு விளக்குகிறார். “ புணர்ச்சி விருப்பம் உண்டாகாத பருவத்தில் கன்னிகையைச் சோமன் அனுபவிக்கிறான். அப்படிப்பட்ட விருப்பம் உண்டான உடனே கந்தருவன் அவளைக் கைப்பற்றிக்கொண்டு விவாக காலத்தில் அக்நிக்குக் கொடுத்துவிடுகிறான். அவனிடமிருந்து மனுஷன் அந்தப் பெண்ணைச் சம்பத்து சந்தானங்களுடன் பெற்றுக் கொள்ளுகிறான். ஸ்மிருதிகள் [3] இது விஷயத்தில்

---

2. तथाचाख्यायते । अनुपजातपुरुषसंभोगेच्छावस्थां स्त्रियं सोमोलेभे . स च सोम ईषदुपजातभोगेच्छावस्थां तां विश्वावसवे गन्धर्वाय प्रादात् । स च गन्धर्वो विवाहसमये ऽग्नये प्रददौ । अग्निश्च मनुजाय भर्त्रे धनपुत्रैः सहिता मिमां प्रायच्छदिति ।

3. पूर्वं स्त्रियः सुरै भुक्ताः सोमगन्धर्ववह्निभिः ।
भुज्यन्ते मानुषैः पश्चा न्न ता दुष्यन्ति कर्हिचित् ॥
व्यजनेषु च जातेषु सोमो भुङ्क्ते च कन्यकाम् ।
पयोधरेषु गन्धर्वो रजस्यग्निः प्रतिष्ठितः ॥

இன்னும் தெளிவாயிருக்கின்றன. "ஸ்திரீகள முதலில சோமன், விசுவாவசு, அக்நி முதலிய தேவதைகளால் அனுபவிக்கபபடுகிறார்கள. அதன்பிறகுதான் மனிதர்கள் அவர்களை அநுபவிக்கிறார்கள. அதனால ஸ்திரீகள் கெட்டுப்போகவில்லை. (அவைகுலில) மயிர்முளைத்த பிறகு சோமன் ஒரு மங்கையை அநுபவிக்கிறான். மார்புபக்குவபட்டான பிறகு கந்தருவன் அவளை அநுபவிக்கிறான். அவள ரஜஸ்வலையான பிறகு அக்நி அநுபவிக்கிறான்." ஆகையால இந்த வேதமந்திரத்தால தெளிவாகிற தென்னவென்றால ஒரு ஸ்திரீக்கு மனுஷன் நான்காவது புருஷன் ஆகிறானென்பதும் அவன் அவளை அக்நியிடத்திலிருந்து பெறுகிறான் என்பதும அந்த அக்நி அந்த ஸ்திரீயை ரஜஸ்வலையான பிறகு அநுபவிக்கிறானென்பதுமே. முடிவைச் சொலலவேண்டியது அநாவசியம். பின்கூறபடுவது பாணிக்கிரகணகாலத்தில சொல்லவேண்டிய மந்திரத்தின் ஒருபாகம. "சற்புத்திரர்களை நீ பெறுமபொருட்டு நான் உனது கையைப் பிடிக்கிறேன். முதுமைபபருவம்வரை என்னுடன் நீ வாழ்வையாக. வாயு உன் ஹிருதயத்தை என் சாரபாகுமபடி செய்யட்டும்." இதற்குபபின் தமபதிகள அக்நியைச்சுற்றி ஏழு அடிகள எடுத்துவைத்து ஏழாம அடிக்குப்பிறகு நாயகியைப்பார்த்து நாயகன் பின்வருமாறு சொலலுகிறான். ஏனெனில் ஒருவகை ஸூத்திரபபடி அவர்கள இந்தச் சமயத்திலதான் நாயகன் நாயகி ஆகிறார்கள. "இப்

பொழுது நாம் சப்தபதி நடத்திவிட்டோம். நீ என் தோழியாவாயாக. நாமிருவரும் தோழர்களாயிருப் போம். நான் உன் தோழமையைப் பெறுவேனாக. நான் உன்னை விட்டும் நீ என்னை விட்டும் (நாம்) ஒருகா லும் பிரியாதிருப்போமாக. நாமிருவரும் சேர்ந்திருப் போம். சந்தோஷமான ஹிருதயத்துடனும் அந்நி யோந்நியநேசத்துடனும் நாமிருவரும் எப்பொழுதும் சேர்ந்து யோசனைபண்ணுவோமாக. நாமிருவரும் விரி யத்திலும் க்ஷேமத்திலும் விருத்தியடைவோமாக. இப்பொழுது நாம் மனத்திலும் செய்கைகளிலும், விருப் பங்களிலும் ஏகமாயிருக்கிறோம். நீ, ருக்; நான் ஸாமம்; நான் ஆகாயம், நீ பூமி; நான் சுக்கிலம், நீ அதைத்தரிக்கிறவள். நானே மனம் - நீ ஜிஹ்வை. நமக் குச் சம்பத்தும் சந்தானமும் உண்டாகும் வண்ணம் நீ விசுவாசத்துடன் என்னைப் பின்தொடர். தேன்மொ ழியே! வா." இவ்வசனங்கள் எட்டு மூன்றுது வயதுப் பெண்களுக்குச் சொல்லும்படியாகவா ஏற்பட்டிருக் கும்? தற்காலம் அநேக அவ்வயதுப்பெண்களுக்கா கவே சொல்லப்படுகின்றன. இவை வாழ்க்கையில் ஆவலுடன் நாடி அமர்கிற ஒருவன் சொல்லுகிறவார்த் தைகளா? அல்லது தற்காலம் எதிர்பார்க்கக் கூடா மலும் இனி எப்போதோ நேரிடப் போகிறதாக மணப்பால் குடிக்கிற ஒருவன் சொல்லுகிறவார்த்தை களா? இன்னும் ஆராய்ந்து பார்ப்போம்.

விவாகத்தின் முதல்நாள் கிரியை முடிந்தவுடனே தம்பதிகள் தங்களுடைய கிருகத்திற்குப்புறப்படுகிறூர்

கள். ஒரு ரதத்தில் போகின்றார்கள். ரதத்தில் பத்நி ஏறும்போது, அடியில் வருமாறு பர்த்தா அவளிடம் சொல்லுகிறான். "என் யஜமானியாக இனிமேல் இருப்பாயாக. என்னால் 10 புத்திரர்களைப் பெறுவாயாக. உன்மாமனார், மாமியார் இவர்களுக்கு யஜமானியாக இருப்பாயாக. இவர்களுக்கும், கிருகத்தில் இருக்கின்ற மற்ற நாட்டுப் பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் எல்லாச்சம்பத்துக்கும் நீ யஜமானியாக இருப்பாயாக."

தங்கள் கிருகத்திற்குப் போனவுடனே, பத்நியின் கிருகத்தினின்று சாஸ்திரீயமாகக் கொணர்ந்த அக்நி முன், கிரியைகளை அவர்கள் திரும்பவும் தொடர்ச்சியாய் நடத்துகின்றார்கள். இக்கிரியைகளின் மத்தியில், ஒரு சமயத்தில், பத்நியின் மடியில் புத்திரர்களையே பெற்ற ஒரு ஸ்திரீயின் ஆண்குழந்தையை வைக்கிறார்கள். அக்குழந்தைக்குப் பழவர்க்கங்கள் கொடுக்கின்றார்கள். அப்போது புருஷன் சொல்லுகிறதாவது:—"பழங்களே! நீங்கள் வித்துக்களைப் பெற்றிருக்கின்றீர்கள். உங்களுடைய ஆசீர்வாதத்தால், என் பத்நியும் அவ்வண்ணம் பெறுவாளாக." ஸ்திரீயைப் பார்த்து அடியில் வருமாறு சொல்லுகிறான்—"நம்முடைய கிருகத்தில், குழந்தைகளுடன் நீசந்தோஷமாக இருப்பாயாக. கிருகத்தின் யஜமானியின் உத்தரவாதங்களைக்கொண்டு செலுத்த அறிந்துகொள்ளு. சிரத்தையுடன், அதிதிகளையும் அக்நியையும் மரியாதைசெய். என்னுடைய சரீ

**ரத்துடன் உன்னுடைய சரீரத்தைச்சேர்.** அநேக வருஷங்கள் சுகம் அனுபவித்துக்கொண்டு நீ, கிழவியாகிற போது, உன்னுடைய புத்திரர்களுக்கும் பௌத்திரர்களுக்கும், உபாசனை யக்ஞ விதிகளையும் உத்தரவாதங்களையும் நீ கற்பிக்கக்கடவாய்.''

## 4. பிரயாசையான விரதம்

இப்போது ஒரு முக்கியமான விரதத்தைப்பற்றிப் பேசுவோம். அதனால் ஏற்படும் அர்த்தவிஷயத்தில் எவ்வித சந்தேகமுமிருக்க முடியாது. ஒவ்வொரு கிருஹ்ய சூத்திரத்தினின்றும் அதைப்பற்றி யுள்ளதை இதன் அடியில் சொல்வோம்.

**சாங்காயனர்** — அத்தியாயம் 1. காண்டம் 17. சூத்திரம் 5. மூன்று ராத்திரிகள் இருவரும் (ஸ்திரீபுமான்கள்) சேராமல் இருக்கட்டும்.

**ஆசுவலாயனர்**.— அத்தியாயம் 1. காண்டிகா 8. சூத்திரம் 10-11. அந்தக்காலம் முதல் அவர்கள் உப்பை வர்ஜிக்கவேண்டும்; சம்யோகமில்லாமல் அவர்கள் சுத்தமாய் நகைகள் அணிந்துகொண்டு, தரையில் மூன்று ராத்திரிகள் அல்லது 12 ராத்திரிகள் சயநம் செய்யவேண்டும்; ரிஷியாகக்கூடிய புத்திரன் உண்டாகவேண்டுமானால் ஒருவருஷம் அப்படி இருக்கவேண்டும்.

**ஜைமினி** — காண்டம் 20. சூத்திரம் 6. ஸ்திரீபுமான் இருவரும், சம்யோகமில்லாமல், ஆனால் ஒரேபடுக்கையில் தரையில் உப்பில்லாத ஆகாரம் உண்டு, பிரஹ்ம

சாரி விரதம் பூண்டவர்களாய 3 ராத்திரிகள சயனம் செய்யவேண்டும்.

**கோபிலர்** —பிரபாடகம் 2. காண்டிகம் 3. சூத்திரம் 5. அதுமுதல் 3 ராத்திரிகள், உப்பில்லா அன்னம் சாப்பிட்டுக்கொண்டு, பிரஹமசாரி விரதம் பூண்டவர்களாய் ஒரே படுக்கையில் தரையில் சயனம் செய்ய வேண்டும்.

**காதிரர்**.- படலம் 1. கண்டம் 4. சூத்திரம் 9. 3 ராத்திரிகாலம் உப்பை விலக்கிய பால் உண்டு, சம்யோகமில்லாமல் ஒரே படுக்கையில் அவர்கள் சயனம் செய்யவேண்டும்.

**மனு**.—ஒருவருஷம் அல்லது 12 ராத்திரி, (அல்லது, 3 ராத்திரி அல்லது 1 ராத்திரி) பிரஹமசரிய விரதத்தை அவர்கள் அனுஷ்டிக்கவேண்டும்.

**போதாயனர்** —பிரச்னம் 1. அத்தியாயம் 7. அவர்கள உப்புள்ள ஆகாரத்தைத் தவிர்க்கவேண்டும். தரையில படுக்கவேண்டும். ஆபரணங்கள் அணியலாம். பிரஹமசரிய விரதம் அனுஷ்டிக்கவேண்டும். இவ்விதம் அவர்கள (ஸ்திரீபுமான்கள்) நடக்கிறதில :—சுரோத்திய ஞான புத்திரன் பிறக்கவேண்டுமானால 3 ராத்திரியும் அநூசானனான புத்திரன் பிறக்கவேண்டுமானால 12 ராத்திரிகளும், ரிஷிகல்ப புத்திரன் பிறக்கவேண்டுமானால் 1 மாதமும், ப்ரூணபுத்திரன் பிறக்கவேண்டுமானால் 4 மாதமும், ரிஷியானபுத்திரன் பிறக்கவேண்டுமானால் 6 மாதமும், தேவனான புத்திரன் பிறக்கவேண்டு

மானால் 1 வருஷமாவது, மேற்படி விரதம்பூண்டு தம்பதிகள் ஒழுகவேண்டும். 4

**ஆபஸ்தம்பர்** பாகம் 3. காண்டம் 8. சூத்திரம் 8. 3 ராத்திரி தம்பதிகள் உப்பில்லாத ஆகாரம் உட்கொண்டு, பிரமசரிய விரதம் பூண்டவர்களாய்த்தரையில் சயனம் செய்யவேண்டும்.

**ஹிரண்ய கேசின்** —பிரசனம் 1. பாகம் 7. சூத்திரம் 10. தம்பதிகள் உப்பில்லாத ஆகாரம் உட்கொண்டு, ஆபரணங்களை அணிந்துகொண்டு பிரஹ்மசரிய விரதம் பூண்டவர்களாய், தரையில் 3 நாள் சயனம் செய்யவேண்டும்.

**காத்தியாயனர்** - 1 வருஷம், 12 ராத்திரி, 6 ராத்திரி அல்லது 3 ராத்திரிகளாவது—உப்புள்ள ஆகாரம் சாப்பிடக்கூடாது. தரையில் சயனம் செய்யவேண்டும். சம்போகம் செய்யக்கூடாது.

---

4 குறிப்பு.—வேதத்தின் **ஒரு சாகை** அத்தியயனம் செய்தவன்—சுரோத்திரியன் ஆவன்.

அங்கங்களைப் படித்தவன்—அநூசானன் ஆவன்.

கல்பங்களைப் படித்தவன்—ரிஷிகல்பன் ஆவன்.

சூத்திரங்களையும் பிரவசனங்களையும் கற்றவன்—ப்ரூணன் ஆவன்.

நாலுவேதங்களையும் கற்றவன்—ரிஷி ஆவன்.

இம்முறைகளைத் தாண்டிப் போகின்றவன்—தேவன் ஆவன்.

**பாஸ்கரீ**—காண்டிகா 8. சூத்திரம் 21. 3 ராத்திரி, உப்பில்லா ஆகாரம் சாப்பிட்டுக்கொண்டு, தரையில் படுக்கவேண்டும். 1 வருஷம், 12 ராத்திரி, 6 ராத்திரி, குறைந்த பக்ஷம் 3 ராத்திரியாவது—சம்யோகம் இல்லாமல் இருக்கவேண்டும். மேற்கண்ட பிரஹ்மசாரிய விரதத்தின் முக்யகருத்து என்னவென்றால், ஆசையைத்தூண்டும் விஷயம் சமீபத்திலிருக்கத் தங்களை அடக்கி க்ஷேமம்பெறுவாராகில், அஃது அவர்களின் உயர் நிலைத்தைக் காட்டுகின்றது. எவ்வளவுக்கு எவ்வளவு அதிக காலம் இவ்விதம் அடக்குவார்களோ, அவ்வளவுக்கு அவ்வளவு, சந்ததியின் குணசீலம் அதிகமாக ஏற்படும். **பாஸ்கரக்ருஹ்ய** சூத்திரத்தின் வியாக்கியாதாவின் [5] அபிப்பிராயப்படி மேற்படி பிரஹ்மசாரிய விரதம் அனுஷ்டிக்க வேண்டியதற்கு அவ்விரதத்தைகொண்டு செலுத்தச் சாமர்த்தியத்தின் தாரதம்மியங்களுக்கு ஏற்ப காலவித்தியாசங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. பிரஹ்மபுராணத்தில் கூடி விரதகாலம், தம்பதிகளின் வயதின் தாரதம்மியத்தைப் பற்றியது என்று சொல்லியிருக்கிறது. [6]

---

5. संवत्सरादिविकल्पास्तु शक्त्यक्षयाव्यवस्थिताज्ञेया:

6 अथतद्द्वादशाहानि त्रिंशद्वर्षेया सर्वदा ।
यदिद्वादशवर्षास्या त्कन्यारूपगुणान्विता ॥
द्वात्रिंशद्वर्षपूर्णेन यदिषोडशवार्षिकी ।
लब्धातदास्थातव्यं षड्रात्रं संयतेनतु ॥
विंशत्यब्दायदाकन्या वस्तव्यंतत्रवैत्र्यहम
अतऊर्ध्वमहोरात्रं वस्तव्यं संयतेनतु

இதன் பொருள் :—12 வயதுள்ள ஸ்திரீயை விவாகம் செய்கின்ற 30 வயதுள்ள புருஷன், 12 நாள் பிரஹ்மசரிய விரதத்தை அனுஷ்டிக்கடவன். அவள் 16 வயதுள்ளவளாகவும் அவன் 32 வயதுள்ளவனாகவும் இருப்பின், 6 நாள் அந்த விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்; அவள் 20 வயதுள்ளவளாக இருந்தால், 3 நாள் அவ்விரதம் அனுஷ்டிக்க வேண்டும். அவள் அந்தவயதுக்கு மேற்பட்டால், ஒருநாள் அவ்விரதம் அனுஷ்டிக்கவேண்டும்

இவ்விரதத்திற்கு இவ்வளவு முக்கியத்தைக் கற்பிக்க வேண்டுமானல், ஸ்திரீயானவள், ருதுவாகி இருக்க வேண்டுமல்லவா ? ஆனல் வைதிகர்கள் இந்த அபிப்பிராயத்தை வெகு இலகுவில் அங்கீகரியார். அவர்கள் அபிப்பிராயத்தில் ஸ்திரீ புருஷ சங்கமத்திற்கு 8 அங்கங்கள் இருக்கின்றனவாம். 7 தம்பதிகள் ஒருவர் மற்றொருவரைப்பற்றி 1. ஸ்மரித்தல், 2. பெயர் குறிப்பிடுதல், 3. விளையாடல், 4. கண்நோக்கல், 5. ரகசியம் பேசல், 6. தீர்மானம், 7. முயற்சி, 8 விஷயசமாப்தி. மேற்கண்ட அங்கங்களில், சிலவைகள், குழந்தைகளாலும் கூட நேரிடஇயலும். அப்படி நேரிட்டால்,

---

7. स्मरणं कीर्तनं केलिः प्रेक्षणं गुह्यभाषणम् ।
सङ्कल्पोऽध्यवसायश्च क्रियानिर्वृत्तिरेव च ॥
एतन्मैथुनमष्टाङ्गं प्रवदन्ति मनीषिणः ॥

பிரஹஸ்பதி. ஆபஸ்தம்ப கிருஹ்யத்துக்கு சுதர்சநாசாரியார் எழுதிய குறிப்பில் எடுத்தாளப்பட்டுள்ளது.

பிரஹ்மசரிய விரதபங்கம் ஏற்படும் அன்றோ? [8] இவ்வித பிரஹ்மசரிய விரதத்தை ஏற்படுத்தாமல் ரிஷிகள் இருந்திருக்கமாட்டாரா என்று நாம் வினவில், சாதாரண ஜனங்கள், ரிஷிகளின்மேல் அபிப்பிராயம் சொல்ல அனருகர்கள் என்று இந்த வைதிகர்கள் சாதிப்பார்கள். இந்த விரதகாலம் முடிவின்மேல், நாலாம

---

[8] तस्मिन्नेता निशि विजने मृदुभिरुपचारैरुपक्रमेत । त्रिरात्रमवचनं हिस्तम्भमिव नायकं पश्यन्तीकन्या निर्विद्येत परिभवेच्च तृतीयामिव प्रकृतिम् । इति बाभ्रवीयाः । उपक्रमेत विस्रंभयेच्च नतुब्रह्मचर्य मतिवर्तेत । इति वात्स्यायनः ।

[8] குறிப்பு இதற்கு எதிராக, காமசாஸ்திரத்தின் கர்த்தாவாகிய வாத்ஸ்யாயனரின் அபிப்பிராயம் என்னவென்றால்:—3 நாள் தாமதம் ஸ்திரீயின் வெட்கத்தை நீக்குவதற்காகவே. பிரஹ்மசரிய விரதத்திற்குப் பங்கமவராமல் புருஷன் கொஞ்சம் கொஞ்சமாக ஸ்திரீயினிடம் சமீபிக்கவேண்டியது. அப்படியன்றி 3 நாள் கட்டைபோல இருந்தால், அவன் அசக்தன் என்று நினைத்து, அதனால் அவனை அவமதிப்பாள். பின்பு பிரவுடையானவளாக இருந்தால், இம்மாதிரி புருஷன் நடந்துகொள்ள வேண்டுமென்றும், இல்லாவிட்டால் இம்மாதிரி நடந்துகொள்ளவேண்டுமென்றும் அவர் சொல்லியிருக்கிறார். இதனால், அவர்காலத்தில், பிரவுடையாகியும் பிரவுடை ஆகாமலும் இருக்கிற ஸ்திரீகளுக்கு விவாகம்செய்யும் வழக்கம் இருந்தது என வெளியாகிறது.

இராத்திரியில், ஸ்திரீ புருஷ சங்கமம் ஏற்பட வேண்டுமென ஊகிக்கலாம். அதைப்பற்றி ஒரு வியக்தமான விதி வேண்டியதில்லை. ஆயினும் சில கிருஹ்ய சூத்திரகாரர் அதை விதித்தும், சிலர் அதைப்பற்றிப் பிரஸ்தாபிக்காமலும் இருக்கின்றார்கள். பிரஸ்தாபிக்காமலிருக்கின்ற சில கிருஹ்ய சூத்திரங்களின் ஆதாரத்தின்மேல், அபக்குவியாக இருக்கிற ஸ்திரீயுடன் 4-ம் நாள் சங்கமம் கூடாதென்று ஒருகக்ஷியை ஆரோபிக்கலாம். ஆனால் அது பொருந்தாது. ஏனெனில், 1. முன் சொல்லியபடி பிரஹ்மசரியவிரதம் அர்த்தமில்லாமற்போய் விடும் வெறும்வேடிக்கையாக முடியும்.

2 உத்தேசத்திற்குத்தக்கபடி சங்கம விஷயத்தில் சில நியமங்களை ரிஷிகள் ஏற்படுத்தியதின் பிரயோஜனம் இல்லாமற்போகும் ஒவ்வொரு பேஷ்டை காலத்திற்குப்பிறகு முதல் 16 ராத்திரி—சங்கமம் ஏற்பட்டால், கர்ப்பம் உண்டாகும் என்பது அவர்கள் அபிப்பிராயம். இதுதான் ருதுகாலம் என்று சொல்லப்படும். நாலாம் நாள் முதற்கொண்டு, வேறு தடைகளில்லாத பக்ஷத்தில், இரட்டைப்பட்ட நாட்களில் சங்கமம் நேரிட்டால், புருஷப்பிரஜை உற்பத்தியாக அனுகூலமாம் தம்பதிகள் இந்த ருதுகாலத்தில் சேரவேண்டு

மென்ற கட்டாயமான விதியும்—தவறினால், அபராத மும் ஏற்பட்டுள்ளது. மற்றக்காலங்களில் ஸ்திரீயின் இச்சை இருந்தால் சேரலாம். முன்னது முக்கியமானது, பின்னது யுக்தமானது. 9

ஆகையால், ருது காலத்தில், முதல்சங்கமம் முக்கியமானதாக ஏற்பட்டிருக்கிறது. ப்ரேஷ்டையான 4-ம ராத்திரிதான் விசேஷதினம். அக்காலத்திற்றான், கர்ப்பாதான மந்திரம் என்ற விஸ்தாரமான மந்திரம் புருஷனால் சொல்லப்படுகிறது. இதை, ஒவ்வொரு கிருஹ்ய சூத்திரகாரரும் விதித்திருக்கிறார். விவா

---

மனு.—அத்தியாயம் 3, ஸ்லோகம் 45-48.

9. ऋतुकालाभिगामी स्यात्स्वदारनिरतः सदा ।
पर्ववर्जं व्रजेच्चैनां तद्व्रतो रतिकाम्यया ॥
ऋतुः स्वाभाविकः स्त्रीणां रात्रयः षोडश स्मृताः ।
चतुर्भिरितरैः सार्धं महोभिः सद्विगर्हितैः ॥
तेषा माद्याश्चतस्रस्तु निन्दितैकादशी च या ।
त्रयोदशी च शेषास्तु प्रशस्ता दश रात्रयः ॥
युग्मासु पुत्रा जायन्ते स्त्रियोऽयुग्मासु रात्रिषु ।
तस्माद्युग्मासु पुत्रार्थी सविशेदार्तवे स्त्रियम् ॥

பராசரர்.

ऋतुस्नातां तु यो भार्यां सन्निधौ नोपगच्छति ।
घोरायां ब्रह्महत्याया पतते नात्रसंशयः ॥

யாஜ்ஞவல்கியர்.

यथाकामी भवेद्वापि स्त्रीणां वरमनुस्मरन् ।
स्वदारनिरतश्चैव स्त्रियोरक्ष्यायतः स्मृताः ॥

கமான 4-ம் ராத்திரி சாதாரணமாய் ருதுகாலமாக இருக்கமாட்டாது. அது ராகப்பிராப்தகாலம். காமத்தைத்தவிர வேறு உத்தேசமில்லை. அதனால், அப்போது, மந்திரத்தினால், புனிதம் பண்ணும்படியான யோக்கியதை அந்தக் காலத்திற்கு ஏற்படாது என்று சில ரிஷிகளின் அபிப்பிராயம். ஆனால், மற்ற ரிஷிகள் மந்திரத்தை உச்சரிப்பது விவாகத்தின் அங்கமாக இருக்கிறதென்று அபிப்பிராயப்படுகிறார்கள். அதனால், அக்காலத்தில் மந்திரத்தைச் சொல்லவேண்டுமென்றும், அந்த இன்னமந்திரம் என்றும் விதித்திருக்கிறார்கள். **போதாயனரும்**, [10] **ஆத்திரேயரும்** சொல்லுகிறதாவது "ஒவ்வொருசங்கமகாலத்தில், மந்திரங்கள் சொல்லவேண்டும்." **சாலிகீ** ரிஷியும் **பாதராயணரும்** சொல்லுகிறதாவது :—ருதுகாலத்தின் முதல்சங்கமத்தில் மாத்திரம் மந்திரம் முக்கியமானது. இதனால், முதல் சங்கமம் என்பது விவாகத்தின் நாலாம் ராத்திரி தம்பதிகள் ஆலிங்கனம் செய்தல் என்றும் ருது காலத்தில் சங்கமம் என்பது கர்ப்பாதான மந்திரத்துடன் ஆலிங்கனம் செய்தல் என்றும் வெளியாகிறது.

**சாங்காயனர்**.—நாலாம் ராத்திரியில் சங்கமத்தைப் பற்றிப்பிரஸ்தாபிக்கவில்லை. **ஆசுவலாயனரும்** அப்

---

போதாயன.

10. सर्वाण्युपगमनानि मन्त्रवन्ति सन्तीति बौधायनः । यद्यादौ यद्यर्ताविति शालिकिः । Also Hiranyakesin. सर्वाण्युपगमनानि मन्त्रवन्तीत्यात्रेयः । यद्यादौ यद्यर्ताविति बादरायणः ।

படியே பிரஸ்தாபிக்கவில்லை. ஆனால், அந்தக்கிருஹ்ய சூத்திர வியாக்கியாதாவாகிய **கார்க்கிய நாராயணர்**—அதைத் தெளிவு படுத்துகிறார். 2-ம் சூத்திரம், 6 கண்டகம். 1. அத்தியாயம் சூத்திரம்:—பொது விதியைச் சொல்லுவோம். அஃதாவது, பலதேசங்களில் வித்தியாசங்களான ஆசாரங்கள இருக்குமாகையால், அவைகளைத் தவிர்த்துப் பொதுவானதைச் சொல்லுவோம் என்று அர்த்தம். ஆனால், கிருஹ்ய சூத்திர விதியானது யாதாவது ஓர் இடத்தில் நடைபெறுகின்ற ஆசாரத்துக்கு விரோதமாக இருந்தால், கிருஹ்ய சூத்திர விதியைத்தான் அனுஷ்டிக்க வேண்டியது. உதாரணமாக, வியாக்கியாதா சொல்லுகிறார் [11] "விதேகர்களுக்குள—விவாக மானவுடனே, சம்போகம் நடக்கிறது வழக்கமாக இருக்கிறது. சூத்திர காரர்.—3 நாள் பிரஹ்மசரிய விரதமானதின் மேல் அஃது ஏற்பட வேண்டும் என்று விதிக்கிறார்."

வியாக்கியாதாவின் குறிப்பினால் அவர் எழுதிய காலத்தில் ருதுவாகி சங்கமத்திற்குத் தகுதியான ஸ்திரீகளுக்கு விவாகம் நடந்தது எனத் தெரியவருகிறது. **ஜைமினி** 20-ம் காண்டம் 7-ம் சூத்திரம்—"மூன்று ராத்திரி கிரமித்ததின் மேல் அவர்கள சங்கமம் செய்யற்பாலது." அந்த சூத்திரத்தின் வியாக்கியாதா

---

11. वैदेहेषु सद्य एव व्यवायो दृष्टः। गृह्येतु ब्रह्मचारिणोत्रिरात्रमिति ब्रह्मचर्यं विहितम्। तत्रगृह्योक्तमेव कुर्यान्नदेशधर्ममिति सिद्धम्।

**ஸ்ரீநிவாசத்வாரி** சொல்லுகிறார். என் 4-ம் ராத்திரி குறிப்பிடவில்லை என்றால், 3-ம் ராத்திரிக்குப் பிறகு நல்ல தினம் பார்த்து ஏற்படுத்த வேண்டியது. 4-ம் ராத்திரி சுபதினமாக இருக்கும் பக்ஷத்தில் நலம் தான். அன்றேல், நல்ல தினம் ஏற்படும்வரை தம்பதிகள் பிரஹ்மசரிய விரதத்தை அனுஷ்டிக்கவேண்டும். நடு ராத்திரிக்குப் பிறகுதான் சங்கமம் ஏற்பட வேண்டுமென்று ரிஷிவிதித்திருக்கிறார். "ஒவ்வொரு ருது காலத்திலும் இந்த விதி அனுஷ்டிக்கவேண்டுமென்று முடிக்கிறார். அவருடைய பூர்த்தியான வசனத்தை அனுபந்தத்தில் பார்க்க. **கோபிலர்**—7-வது சூத்திரம். 5-வது காண்டிகை, 2-வது பிரபாடகம். "3 ராத்திரிக்குமேல ஸ்திரீ புருஷ சங்கமம் செய்யலாம் என்று—சிலர் அபிப்பிராயப் படுகிறார்கள்" சிலர் என்றது—**ஜைமனி** ரிஷியைக் குறிக்கிறதாகத் தோன்றுகிறது. இவர் அபிப்பிராயத்தில், கூடாது என்று இருக்கிறது. அதன் காரணம் பின்பு வரும். அப்படி வழக்கம இருக்கிறதென்றும், அதைத் தூஷிக்க வில்லை யென்றும் அவர் வசனத்தால் தெரிய வருகிறது என்று மாத்திரம் இப்போது கிரகிப்போம்.

**பாரஸ்காரர்** :—நாலாம் ராத்திரி சங்கமத்தைப்பற்றி இவர் பிரஸ்தாபிக்கவில்லை. இவர் வியாக்கியாதாவாகிய **ஹரிஹரர்** [12]. இவர் அபிப்பிராயம் இன்னதென்று

---

12. संवत्सरादिपक्षाशक्तौ त्रिरात्रपक्षाश्रयणेऽपि चतुर्थीकर्मानन्तरं पञ्चम्यादिरात्राावभिगमनम् । चतुर्थीकर्मणः प्राक्तस्या भार्यात्वमेव न संवृत्तं विवाहैकदेशत्वाच्चतुर्थीकर्मणः ।

வெளியிடுகிறார். அதிககாலம், விரதத்தை அனுஷ்டிப்பது சிரமமாக விருக்கிறதை உத்தேசித்து, 3 ராத்திரி காலம் விதிக்கப்பட்டிருந்த போதிலும், 4ம் நாள் கிரியைமுடிவு பெற்றவுடனே, 5ம் ராத்திரி முதற் கொண்டு, சங்கமம் செய்யலாம். 4ம் நாள் கிரியையானது, ஸ்திரீயின் பக்தி தர்மத்தைப்பூரணம் செய்விக்கின்றதாக விருக்கிறது. அது கல்யாணகிரியையின் ஒரு பாகமாக இருக்கிறது.

**போதாயனர்** :—இந்தக்கிருஹ்ய சூத்திரக்காரர்அபிப்பிராயப்படி—3 அல்லது அதிக நாள் ராத்திரி காலம் விரதம் அனுஷ்டிக்கின்ற சமயத்தில், ஸ்திரீ புருஷர்களின் மத்தியில், உதம்பரமரத்தின் ஒரு தண்டத்தைச் சந்தனம் பூசி ஒரு துண்டு வஸ்திரத்தை உடுத்திப் படுக்கப்போடவேண்டும். அதில் **விசுவாவசு** என்ற கந்தர்வன் இருக்கிறதாக பாவனை. 4-ம் நாள் ராத்திரி பக்குவ ஓமம் செய்து முடித்ததின்மேல், அழகாய் அலங்கரித்துப் படுக்கை அறைக்குள் தம்பதிகள் போகவேண்டும். அக்காலத்தில், அதிக அர்த்தம் அடங்கிய ஒரு மந்திரம் சொல்லப்படுகிறது. அஃதாவது.—“விசுவாவஸு! உம்மை நமஸ்கரிக்கிறேன். உம்மை ஸ்துதிக்கிறேன். இப்படுக்கைவிட்டு எழுந்திரும். குழந்தைப் பருவமுள்ள வேறு ஒரு பெண்ணை நாடுவீராக. இந்த என்பத்நி, என்னுடன் சேர நீர் அனுமதிகொடும். இப்படுக்கைவிட்டு எழுந்திரும். அவளுக்கு ஒரு புருஷன் இப்போது ஏற்பட்

டிருக்கிறான். பிரவுடையாகாதவும், பிதாவுடன்வசிக்கிறவளுமான வேறு ஒரு பெண்ணைப்போய் அடைவீர். ஜூ: 13. அவள் உம்முடையவள். உமக்குப் பிறப்பினால் உள்ளசுதந்தரம்." விசுவாவசுவைவிட்டுபோகச் சொன்னதின்மேல், அவர் இருந்த தண்டத்தைப் புருஷன் கையால் எடுத்து, தன் பத்நி இடத்தில் கொடுக்கிறான். அவள் அதைத்திரும்பி அவனிடம் கொடுக்கிறாள். அதைக் கடைசியாக எறிந்து விடுகிறார்கள். பிறகு,கிருஹ்ய சூத்திரக்காரர் சொல்லுகிறார். "ஸ்திரீ புருஷ சங்கமம் யாவருக்கும் தெரிந்த விஷயமே." மந்திர விஷயத்தில—போதாயனர் அதிக கவனமுள்ளவர். புருஷனை ஒரு நீண்ட மந்திரத்தை உச்சரித்துக்கொண்டே ஒரு அசப்பியமான காரியத்தை (योनिविवृणनम्) செய்யச் சொல்லுகிறார். அம்மந்திரம் விஷய சுகங்களை விஸ்தாரமாகச் சொல்லுகிறது. அவைகளைக் கூச்சத்தினால விஸ்தாரமாக மொழிபெயர்க்காமல் விடுகிறோம். இப்புஸ்தகத்தின் அனுபந்தத்தில், மூலத்தையும் அதன்மேல் சாயனர் எழுதியிருக்கும் பாஷ்யத்தையும் விவரித் திருக்கிறோம். பிறகு, சங்கம கிரியைக்கு ஒரு சிறு மந்திரம் இருக்கிறது. 14

"கொதிக்கிற அரிசியின் மேல்நுரையானது கள்ளுடன் சேர்வதுபோல பிரஜையின் பொருட்டு உன்னு

---

13. व्यक्तां स्तनोद्गमादिगाहित्येनाप्रौढाम् ।

14. प्रजायै त्वा संसृजामि मासरेण सुरामिव ।

டன் நான் சேருகிறேன்." அப்போது ஸ்திரீயானவள் அழுதால், புருஷன் இந்த மந்திரத்தை சொல்ல வேண்டும்—அதாவது, கன்னிகாதான காலத்தில், ஸ்திரீயின் பந்துக்கள் அழுதால், சொல்லவேண்டுமென்று ஆபஸ்தம்பர் சொல்லியிருக்கிற மந்திரம்—ஸ்திரீயானவள் தன்னுடைய நாதனை கிருகத்துக்குப் போக ரதத்தின்மேல் வரும்போது, அவள பந்துக்கள் அழுதால, சொல்லவேண்டுமென்று ஆசுவலாயனர் சொல்லியிருக்கிற மந்திரமும் அதுவே. அது முன்னமேயே மொழி பெயர்க்கப்பட்டுள்ளது **सनिर्णयप्रयोगमाला** பெயருள்ளதும், இந்த கிருஹ்ய சூத்திரத்திற்கு ப்பிரயோக விதியாகவுமிருக்கிற கிரந்தகர்த்தா வேங்கடேசர் என்பார் இந்தக்கிரியையைப்பற்றிச் சொல்லிமுடிக்கும் காலத்தில அடியில் வருமாறு எழுதியிருக்கிறார். " **योनिविवृणनम्** கிரியையை இக்காலத்தில் செய்கின்றார்கள இல்லை. குணசீலர்கள அதை அனுஷ்டிக்கிறதில்லை. 15. அது நமமுடைய மனநேர்மைக்கும், மனத்திற்கும் குறைவாக இருக்கிறது. மூல ஆதேசமும் அதன் பிற்பட்ட ஆசார மின்மையும் அதன் அசப்பியத்தைக் காட்டுகிறது.

மனு--கிருஹ்ய சூத்திரங்களில மிகபபிராசீனமானது இது. ஒரு வருஷம், அலலது 12 ராத்திரி, அல்லது 3 ராத்திரி, அல்லது ஒரு ராத்திரி, பிரஹ்மசரிய விரதம்

15. **अत्रयोनिविवृणनादिकं न कुर्वन्तिशिष्टैरनाचरितत्वात्लौकिकविरोधाच्च ।**

முடிந்தமேல், தம்பதிகளுக்குச் சங்கமம் விதிக்கப்பட்டிருக்கிறது. விஷய கிரீடைகள் சிலவைகளுக்கு, மந்திரங்களையும் விதித்திருக்கிறார். (1-24-16) பின்பு நுகத்தின் கயிற்றை அப்புறப் படுத்தி—தம்பதிகள் சம்யோகம் செய்யவேண்டும். ஸ்திரீ சொல்லவேண்டியது—"என் ஹிருதயத்தை அறிவீர். உம்மிடத்தில் பிரீதியுள்ளவளாக இருக்கிறேன். நீர், தபஸினால் பிரகாசிக்கின்றீர். குழந்தையால், என்னை நிரப்பும். இந்த நம்முடைய கிருகத்தைச் செல்வத்தால் பூர்ணப்படுத்தும்—புத்திரனை நீர் அபேக்ஷிக்கிறீர். அவ்விதம் உம்மை என்னில் உண்டு பண்ணுவீராக." புருஷன் உத்தரம் சொல்லுகிறதாவது—"நீ அழகாய்ப் பிரகாசிகிறாய்; என்றால், புத்திரன் உன்னிடம் உண்டாக்கபெற, விரும்புகிறாய்; இப்போது வாலிபமாக இருக்கிறாய்; உன்மேல் இருக்கிறேன்; புத்திரனைவிரும்புகிற நீ உன்னிடத்தில் உன்மாதிரியானவனை உண்டு பண்ணிக்கொள்." 17-வது சூத்திரம் மொழிபெயர்க்க லஜ்ஜையாக இருக்கிறது. அனுபந்தத்தில் பார்த்துக் கொள்ளுக.

**ஹிரண்ணிய கேசியர்** :—நாலாம் ராத்திரியில், அக்நியில் ஓமங்கள் செய்தபிறகு, புருஷன் ஸ்திரீயின் யோனியை தொட்டுக்கொண்டு, ஒரு மந்திரத்தைச் சொல்லவேண்டியது என்று இந்தக்கிருஹ்ய சூத்திரத்தில் சொல்லியிருக்கிறது. இதற்கு அடுத்த சூத்திரம் அடியில் வருமாறு.

"அடியில் வரும் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு புருஷன் ஸ்திரீயுடன் சங்கமம் செய்கிறான். நம்மிருவர் ஆத்மாவும் ஒன்றாய் விட்டன; நம்மிருவர் இருதயமும் ஒன்றாய் விட்டன; நம்மிருவர் நாபியும் ஒன்று சேர்ந்தன; நம்மிருவருடைய சரீரமும் ஒன்று சேர்ந்தன பிரியம் என்ற கயிற்றால் உன்னை நான் கட்டுவேன். அதை ஒருவராலும் பேதிக்க முடியாது." ஆலிங்கனம் செய்வதற்கும், முத்தம் இடுதலுக்கும் வெவ்வேறு மந்திரங்கள் இருக்கின்றன. கர்ப்பாதானத்திற்கு விதிகள் பின்னர் பிரஸ்தாபிக்கப்படுகின்றன.

இந்தக்கிருஹ்ய சூத்திரத்தை ஆதாரமாகக்கொண்டு, **பட்டகோபிநாததீக்ஷிதர்** என்பார் சம்ஸ்கார ரத்னமாலை என்ற பெரிய புஸ்தகத்தைச் செய்துள்ளார். 16. அதில் அடியில் வருமாறு சொல்லியிருக்கிறது. "4-ம் ராத்திரி ஸ்திரீ புருஷசங்கமம் கட்டாயமாக ஏற்பட வேண்டியது. ஏனெனில், ஸ்திரீக்கு அது முக்கியமான ஸம்ஸ்காரம்."

**ஆபஸ்தம்பர்** :—இந்தக்கிருஹ்யசூத்திரதின் பிரஸ்தாபம் கடைசியில வைத்துக்கொண்டோம். இந்த நாடுகளில் இது பெருமபான்மையாருடைய அனுஷ்டானத்திலிருக்கிறது. பிரகிருத விஷயத்தில் இதிலுள்ள விதிகளை அர்த்தம் செய்வதில் சில விவாதம் ஏற்பட்டுள்ளது.

16. इदमुपगमनमावश्यकं स्त्रीसंस्कारत्वात् ।

**போதாயனர்; ஹிரண்ய கேசியர், ஆபஸ்தம்பர்** இம் மூவரும் ஒரே சாகையைச் சார்ந்தவர்கள். அவர்களால் ஏற்பட்டுள்ள விதிகள் அநேகமாக ஒரே மாதிரியானவைகள். பிரகிருத விஷயத்தில், மற்றவர்களை விட, **ஆபஸ்தம்பர்**, நாகரிகம் பற்றியவராக இருக்கின்றார். **योन्यभिमर्शनम्, योनिविवृणनम्** முத்தமிடுதல், ஆலிங்கனம் செய்தல் இவைகளுக்கு, மற்றவர்கள் மந்திரங்களை விதித்திருக்கின்றார்கள். **ஆபஸ்தம்பரோ** வென்றால், ஸமீக்ஷணம்—அதாவது, தம்பதிகள், ஒருவரை ஒருவர் பார்த்தல், ஹ்ருதய சமமார்ஜனம்—அதாவது, ஹோமத்திற்குப்பிறகு மிகுதியான நெய்யால், இருவர்களுடைய ஹ்ருதயங்களைத் தொடுதல். இவ்விரண்டையும் மந்திரத்தைச் சொல்லுகிறதின் மூலமாகப் புனிதப்படுத்தல் வேண்டும் என்கிறார். இவைகள் சங்கமத்தில் முடிவுபெறுகிறது. **சங்கமம்** பண்றதற்கு "ஸமவேசனம" என்ற பிரிதிபதம் உபயோகிக்கிறார். பச்சையாகச் சொல்லுகிறதைத் தவிர்த்திருக்கிறார். **போதாயனர்** சொல்லியிருக்கிறபடி, நாலாம் நாள் ராத்திரியில் தம்பதிகள் எழுந்து கந்தர்வன் விசுவாவசு என்பவரைப் போகும்படிக்கும் தாங்கள் தனிமையாக இருக்கும்படி விட்டுவிடும்படிக்கும் பிரார்த்தனை ஏற்பட்டிருக்கிறது. இதற்குப் பிறகு சேஷ ஹோமம் செய்யவேண்டும். அதன் முடிவில் ஸ்திரீயானவள் புருஷனைப் பார்த்துச்சொல்லுகிறதாவது.

"என் மனைஸ நீர் அறிவீர். பிரியத்துடன் உம்மை நான் பார்க்கிறேன். தபஸினுல் நீர் ஜ்வலிக்கிறீர். என் (வயிற்றில்) குழந்தையா நிரம்பச் செய்யும். நம் முடைய கிருகத்தைச் சம்பத்தால் நிரம்பச் செய்யும். புத்திரன் வேண்டுமென்பது உமமுடைய அபேக்ஷை. அப்படியே உம்மை உண்டுபண்ணுவீராக."

இதன் பிறகு, புருஷன் ஸ்திரீயைப் பார்க்கும் முறை ஏற்படுகிறது. அப்படிப் பார்த்துப் புருஷன் சொல்லு கிறதாவது:—"நீ பிரகாசிக்கிறுய. குழந்தையை என்னுல பெற ஆவலாக இருக்கிறுய். உனக்கு இப் போது நலலெண்ணமிருக்கிறது. நான் உன்மேல இருக்கும காலத்தில, விஷய சுகத்தை அனுபவி. புத்திரனை அபேக்ஷிக்கின்றவளாக, உன்னை உண்டு பண்ணு." புருஷன் ஹ்ருதயங்களை தொடாமல தொடும் பொழுது அடியில வரும மநதிரத்தைச் சொலலு கிறுன். விசுவே தேவர்கள நம்மிருவருடைய ஹ்ரு தயங்களைச் சேர்க்கட்டும; ஜலம் நம்ஹ்ருதயங்களைச் சேர்க்கட்டும். வாயுவும் பிரஹ்மாவும் நம்ஹ்ருதயங் களைச்சேர்க்கட்டும்; இநதச்சஙகம சமயத்துக்கு அனு குணமான சம்பாஷணையை, சரஸ்வதி தேவி நமக்குக் கற்பிக்கட்டும்." இச்சமயத்தில் 3-ரிக்குக்கள் சொல் லப்படுகின்றன. முதலாவது. "பிரஜாபதியே, நான் செய்யப்போகின்ற காரியத்திற்கு எனக்குச் சக்தியுண் டாகும்படி, என் சரீரத்துக்குள் பிரவேசியும். விஷ்ணு வுடனும் மற்றத் தேவர்களுடனும் ரூபங்களை நிர்மா

ணம் செய்கின்ற துவஷ்டிரியே—நீரும் அப்படியே செய்யும். விசுவேதேவர்களுடன் உம்முடைய சிநேகிதர்களுடன் கூட இருந்து வரங்களை அளிக்கின்ற இந்திரனே—நீரும் அப்படியே செய்யும்.

இரண்டாவது ரிக்கு—இந்த விஷயத்துக்குச் சம்பந்தமன்று. 3-ம் ரிக்கு ஏதேனும் பிரகிருத விஷயத்தில் சந்தேகம் இருக்கும்பக்ஷத்தில், அதை முற்றும் விலக்குகிறது. அதை இவ்விடத்தில், மொழிபெயர்க்க அதிக சங்கோஜமாக விருக்கின்றது. இந்த ரிக்குக்களைச் சொன்னதன்மேல், சூத்திரம் விதிக்கிறது "மற்றவைகளை சம்போக சமயத்தில் சொல்ல வேண்டும்." மற்றவைகள் என்றால், அனுவாகத்தில் பிரஸ்தாபித்திருக்கிற ரிகுதியானவைகளான **சமாவேசன** மந்தரம். இதைப் பற்றியும் அனுபந்தத்தில் பார்த்துகொள்ளுக.

**ஜைமனி, போதாயினர், ஹிரண்ய கேசியர்** இவர்களின் கிருஹ்ய சூத்திரத்திற்போல, **ஆபஸ்தம்பரும்** கர்ப்பாதானத்தைப் பற்றி, விதி சொல்லியிருக்கிறார். கர்ப்பாதானத்தை ருதுசமாவேசனம் என்று பெயரால் குறிப்பிடுகிறார். **(विष्णुर्योनिं कल्पयतु)** ஆரம்பிக்கின்ற வேறு ஒரு மந்திரம் அதற்குள்ளது. பாஷியகாரராகிய **சுதர்சனாசாரியார்** என்பார் விவாகத்திற்கு முன் ருதுவாகியிருக்கிற கன்னிகைக்குத்தான் பொருந்தக்கூடிய விதியை ஏற்படுத்தியிருக்கிறார். கன்னிகை ருதுவாகி 5-ம் நாள் முதல், 13-ம் நாளுக்கு மத்தியில்

விவாகம் சேர்ந்தால் விவாகத்தின் நாலாம் ராத்திரி நடக்கவேண்டிய சமாவேசனம் என்ற கிரியையும், ருது சமாவேசனமும் ஒரேகாலத்தில் நடத்த வேண்டுமானல் புருஷன் இரண்டு கிரியைகளுக்கும் ஏற்பட்ட மந்திரங்களைச் சொல்லவேண்டும். முதலில் சமாவேசனத்துக்குரிய மந்திரமான (आरोहोरुम्) பிறகு ருதுசமாவேசனத்திற்குரிய மந்திரமான (विष्णुर्योनिं कल्पयतु) சொல்ல வேண்டும். இதற்குஆதாரமாக **போதாயனருடையவும், சாலிக்கிய**ருடையவும் அபிப்பிராயத்தை சொல்லுகிறார். பின்னவர் தம்பதிகளில் முதல சங்கமத்திற்கு அதாவது ருது சங்கமத்திற்கு மாத்திரம்தான் மந்திரங்களை விதித்திருக்கிறார். ராகப்பிராப்தமான சங்கமத்திற்கு விதிவேண்டியதில்லை. ஆயினும், விவாகக் கிரியை பூர்த்தியாகவேண்டி, நாலாம் ராத்திரி சங்கமத்தையும் அதற்குரியமந்திரத்தையும் (**ऋमजपयोर्विधानम्,** **ஆபஸ்தம்பர்** விதித்துள்ளார். ருது ஆகுமுன் விவாகங்கள் நடக்கிறதை அறிந்தவரானகையால், சுதர்சனாசாரியார், சிறு குழந்தைகளுக்கு, ராகம் அல்லது காமம் உண்டாகமாட்டாது என்றும், அதனல் சமாவேசனம் என்ற கிரியையை விட்டுவிடலா மென்றும் சொல்லுகிறார். ஆனல், சிலர் அபிப்பிராயத்தில் இந்தச் சமாவேசனம்முக்கியமாகவேண்டுமென்பதையும் தாம் ஆக்ஷேபிக்காமல் தெரிவிக்கிறார். இதனலும். முன், **இரண்டுசமாவேசனங்களும்** செய்யவேண்டுமென்று சொல்லுவதினலும் சமீபகாலமான இவர் காலத்திலும்

சில ருதுவான கன்னிகைகளுக்கு விவாகங்கள் நடந்திருக்கிறதென்று தெரியவருகிறது.

இந்தக் கிருஹ்ய சூத்திரத்தைப் பற்றியும், இதன் வியாக்கியானத்தைப்பற்றி இவ்வளவு விஸ்தாரமாய் எழுதும்படி நேரிட்டதற்குக் காரணம் என்னவெனில், விபரீத புத்தி தீக்ஷண்யமுள்ள பண்டிதர்கள் 10-ம் சூத்திரத்தில் உள்ள **சமாவேசனமும்** 13-ம் சூத்திரத்திலுள்ள ருதுசமாவேசனமும் ஒரேகிரியை. அதாவது பிரதியதே என்றும் ஆதலால், ஆபஸ்தம்பர், விவாகமான நாலாமராத்திரி ஏகமாக கூடுமென்று விதிக்கவில்லை யென்றும் ஆக்ஷேபம் செய்யத் துணிகின்றார்கள் என நாம் அறிகிறோம். இந்த அபிப்பிராயமுள்ள அர்த்தத்திற்கு இணங்க, நவீனமான பிரயோக புஸ்தகத்தில், விவாகப்பிரகரணத்திலிருந்து சமாவேசன மந்திரத்தை விலக்கிக்கர்ப்பாதானப்பிரகரணத்தின்முதன்மையில் சேர்த்திருக்கிறார்கள். இந்த ஆச்சரியமான வேறுபாடு இன்னும் ஸ்திரமாக ஏற்படவில்லை. சிலர் இதை ஆக்ஷேபித்து, வெவ்வேறான இரண்டு **சமாவேசனம்** செய்யவேண்டுமென்கிறார்கள். ஆனால் இவர்களும், கன்னிகையானவள் இரண்டு சமயத்தில், பக்குவியாக இருக்கவேண்டுவதில்லை என்றும், தம்பதிகள் ஒருவருக்கொருவர் ரகசியமாக பேசப்படாதா? ஸ்பரிசிக்கக்கூடாதா? பெயர்சொல்லி அழைக்கக்கூடாதா? என்றும் சொல்லுகிறார்கள். இந்தக்கக்ஷி அதிக விபரீத கக்ஷியாக இருக்கிறது. இது பொருத்தமில்லை.

இதில் உபயோகிக்கப்படும் மந்திரம் (आरोहारम्) சமாவேசனத்தினின்றும் விலக்கக்கருதுகின்ற சங்கமத்தின் முக்கியமான அங்கமாகிய (क्रियानिर्वृति) விவரணங்களையே பச்சைபச்சையாக விவரிக்கின்றது.

**அனுஷ்டானங்களிலுள்ள சில அறிகுறிகள்.**

இக்காலகதியை நன்றாய்த்தெரிந்த புரோகிதர்கள சமாவேசன மந்திரத்தை விவாககாலத்தில் உபயோகிக்கிறதில்லை முன்போலவே உபயோகிக்கிறார்கள். வார்த்தையும் கிரியையும் முற்றும் ஒற்றுமையாக இருக்கவேண்டியது அவசியமாக இருந்தாலும் இதுவே மந்திரமாக இராததால் அதனுடன் நேர்மையாகக் கிரியை இல்லாவிட்டாலும், ஒருவிதமான குப்தமான பலன் உண்டென்று அவர்கள், சமாதானம் சொல்லக்கூடும். சம்பந்தமில்லாமலும், காலம் தவறியும் உச்சரிப்பதினால் மந்திரத்துக்குப் பலம் உண்டாகுமென்று நம்பிக்கையில்லாமலிருந்தாலும், உண்டாகுமென்று ஒப்புக்கொள்ளலாம். சாவதானமான புரோகிதர் இந்த மந்திரத்தை **விவாக** காலத்திலும், **கர்ப்பாதான** காலத்திலும் உபயோகிக்கிறார். கந்தர்வனின் பிரதீகமான தண்டம் மத்தியில் போட்டுத் தம்பதிகள் மூன்று ராத்திரிகளிலும் தூங்குகிறவழக்கம் அநேகமாக இக்காலத்தில் விட்டே போயிற்று. உதம்பரதண்டம் என்பது ஒருசிறுகோல், சிறுசமித்து. கல்யாணப்பந்தலுக்குள் கீற்றுக்கு மத்தியில் சொருகிவைத்திருக்கிறது. 4-ம்ராத்திரி கந்தர்வன்

கிறது என்ற வழக்கம் நடைபெறுகிறது. இதனால், என்ன நேரிடும் என்பதை (Age of Consent Act.) நினைவு தெரிந்ததன்மேல் சங்கமம் செய்யற்பாலது என்ற சட்டத்தின், உட்கருத்தை விசாரித்தால் தெரிய வரும்.

நம்முடைய ராஜதானியில், சமீபகாலம் வரையில் ருது ஆகாதபோது, பொய்யாக, ருதுவானதுபோலப் பெயர் பண்ணி ருதுசாந்தி முகூர்த்தத்தையும் நடத்திக்கொண்டு வந்தார்கள். இஃது ஒரு பெரிய துராசா

விவாகமானவுடனே, ஸ்திரீ புருஷசங்கமம் வைத்துக்கொள்ளுதல், அயுக்தம். ஹிந்து தர்மசாஸ்திரத்துக்கும் சம்மதமில்லை. ஆனால் அது பொதுவான வழக்கமாக விருக்கிறது. பெற்றோர்கள், யோசனையில்லாமல், இந்த அனுஷ்டானத்திற்கு இடம் கொடுக்கிறார்கள். விபரீதம் நேரிட ஆஸ்பதமாக விருக்கிறது. விவாகத்தின் இரண்டாம் ராத்திரி புஷ்பபடுக்கை கிரியை நடக்கிறது. புருஷனும் ஸ்திரீயும்—இக்காலத்தில் சிசுக்கள் சங்கமத்திற்காக ஒரேபடுக்கையில் படுக்கவேண்டும். இந்தத் துர்வழக்கம் இயல்பிற்கு விரோதமான நடத்தைக்கு இடங்கொடுக்கிறது. இதைப் பற்றியும் விஸ்தரிக்கவேண்டுமா? மற்றக் கொடுமைகளுடன் இந்த வழக்கம் பருவத்திற்கு முன்னமேயே, ருது நேரிடும்படி செய்விக்கிறது. அதனால் பாலிய விவாகத்தினால் நேரிடும் தீமைகள் விளைகின்றன. மதத்திற்கு எவ்வித குறைவுக்கு இடமின்றி, இவ்வழக்கத்தைத் தவிர்க்கலாம் ஜனக்கணக்கு ரிபோர்டு 1 தொகுதி 9-வது அதிகாரம் 434 பக்கம் வங்காளி உத்தியோகஸ்தர் ஒருவரின் அபிப்பிராயம் எடுத்து ஆளப்பட்டிருக்கிறது.]

ரம். ஆனால் இக்காலத்தில் இதைப்பற்றி நாம் அதிகமாகக் கேள்விப்படுகிறோமில்லை. இதை ஆபஸ்தம்பரிஷியும் ஆதரிக்கிறார் என்று ஒரு சாமர்த்தியமான புரோகிதர் சமாதானம் சொன்னார். இந்தப்போலியான, ருதுசாந்தி முகூர்த்தத்திற்குத்தானே **சமாவேசன** மந்திரமும் உண்மையான ருதுசாந்தி முகூர்த்தத்திற்கு ருதுசமாவேசன மந்திரமும் ஏற்பட்டதன்றோ? ஆபத்துக் காலத்திற்கு புத்தி நுட்பமும் சகஜந்தானே.

6. **வேதத்தின் மறுச் சாக்ஷியம்** விவாகக்கிரியை முறைமையும் அதன் மந்திரங்களையும் விசாரிப்பதில், வேத சம்பந்தமான பாகங்களையும் ஆராய்ச்சி செய்ய அவசியமேற்பட்டது. நம்முடைய அபிப்பிராயத்தை ஆதரிக்கிற இன்னும் சில வேதவாக்கியங்கள் இருக்கின்றன. அவைகளைச்சொல்லுமுன், ஒரு முக்கியமான விஷயத்தை இவ்விடத்தில் பிரஸ்தாபித்தல், அவசியமாம். அஃதாவது, ஆதிகாலத்தில், புருஷனைப் போலவே, ஸ்திரீக்கும், விவாகம் செய்துகொள்ளுதல், கட்டாயமன்று, யுக்தமே. [18] விவாகம் செய்துக்கொள்ளாமல்,

---

18. पुरा कल्पे कुमारीणां मौञ्जीबन्धन मिष्यते ।
अध्यापनं च वेदानां सावित्रीवदनं तथा ॥
पिता पितृव्यो भ्राता वा नैना मध्यापयेत्परः ।
स्वगृहे चैव कन्याया भैक्षचर्या विधीयते ॥
वर्जयेदजिनं चीरं जटाधारणमेवच ॥ — *Yama* quoted in Parasara-Madhaviyam.

**The Agni Purana, after mentioning the incidents and marks of Bramacharya, proceeds :**

பெற்றோர்களுடன், கூடவே அவர்களுக்குச் சிஷ்ரூஷை செய்துகொண்டோ, அல்லது, வேதாந்தகாலக்ஷேபம் செய்தும் தபஸ்விகளாக இருந்த ஸ்திரீகள் இருந்திருக்கிறார்கள் என்பதற்குத் திருஷ்டாந்தங்கள் உண்டு. ஸ்திரீகளுக்குத் தங்களுடைய புத்தியைச் சுயேச்சையாய் நிறைவேற்றக்கூடிய வயதில்தான் விவாகம் நேர்ந்திருக்கவேண்டுமென்று தெரியவருகிறது.

ருக்வேதத்தில் அடியில் வருமாறு 19. "ஸோமன் பத்நியை விரும்பினான், இரண்டு அசுவினிதேவர்களும் அப்படியே; பாலியமாகவும் புருஷன் வேண்டுமென்று ஆவலாக இருந்தவளுமான சூர்ய என்பவளைச் சோமனுக்குச் சவிதா கொடுத்தார்." இதனால் சூரிய என்பவளுக்கு ருதுவானமேல விவாகம் நடந்தது எனத் தெரியவருகிறது.

---

स्त्रीणाममन्त्रतस्तानि विवाहस्तु समन्त्रकः ।

This if from the Rig-Veda अमाजूरिव पित्रोः सचा समानादा सदसस्त्वामिये भगम् । A father prays to Indra for a daughter "like Amaju, who stayed with her parents in her house and obtained a share of their property."

The Mahabharata and the Purana mention many women who elected not to marry. One meets with this statement frequently. द्विविधाः स्त्रियो ब्रह्मवादिन्यः सद्योवध्वश्च ।

19. सोमो वधूयुरभवदश्विना स्तावुभावरा । सूर्या पत्ये शंसन्तीं मनसा सविता ददात् । Sayana's commentary runs सोमो वधूयुर्वधूकामो वरो ऽभूत् । तस्मिन्समये अश्विना अश्विनौ उभा उभौ वरा वरौ आस्ताम् अभूताम् । यद्यदा सूर्या पत्ये शंसन्तीं पतिं कामयमानां पर्याप्तयौवनामित्यर्थः सूर्यां मनसा सहिताय सोमाय वराय सविता तत्पिता ददात्प्रादात् दित्सीचकार ।

வேறு ஓர் இடத்தில் அக்கினியில் இடையறாத தொடர்ச்சியாக ஆஹுதிசெய்கிற நெய்யின் தாரையை விவாகமில்லாத ஸ்திரீயானவள், புருஷனைத்தேடிப் போதலுக்கும் தன்னுடைய அழகுகளை வெளிக்காட்டுதலுக்கும் உபமானமாகச் சொல்லியிருக்கிறது.[20] பக்குவமான ஸ்திரீகளைத்தான் அவ்விதம் வர்ணிக்கக்கூடும்.

தைத்திரிய ஸம்ஹிதை 4-ம் காண்டம் 3-ம் பிரச்னம் 11-ம் அனுவாகத்தில் அடியில் கண்டபடி இருக்கிறது.[21] "வியுஷ்டி என்ற மந்திரமானது, ஸிருஷ்டியின் உதயம். அது சூரியனுடன் சேர்ந்து தினந்தோறும் உலகத்தைப் பிரகாசிப்பிக்கிறது எதுபோல

---

20. कन्या इव वहतुमेतवा उ अञ्ज्यञ्जाना अभिचाकशीमि । यत्रसोमः सूयते यत्रयज्ञो घृतस्य धारा अभितत्पवन्ते । commentary कन्या इव अनूढा बालिका इव यथा वहतु प्राप्तुं एतवा उ एतुं पतिं गन्तु अञ्जि अञ्जकं आभरणं तेजो वा अञ्जाना व्यञ्जन्त्यः एवं कुर्वन्त्यः कन्या इव ।

21. इयमेव सा या प्रथमा व्यौच्छदन्तरस्यां चरति प्रविष्टा । वधूर्जजान नवगञ्जनित्री त्रय एनां महिमानः सचन्ते । Com. अत्रोपधीयमाना या इष्टकास्ति इयमेव सा । सेयं व्युष्टिरूपा कालानां प्रथमभूता सती व्यौच्छत् विशेषेण प्रकाशरूपा ऽभूत् । आदिसृष्टिकाले प्रथमो यः प्रभातकालः तद्रूपेयमिष्टकेत्यर्थः । सा सृष्टिकालीना प्रथमा व्युष्टिरादित्येनानुप्रविष्टा सती अस्यां पृथिव्यां दैनंदिनप्रभातरूपेण चरति । तत्र दृष्टान्तः । वधूर्जजान नवगन्जनित्री । नवं वरं गच्छतीति नवगन् । नूतनविवाहवती वधूः जनित्री उत्तरोत्तरप्रजोत्पादिका जजान जाता । तद्वदियमपिव्युष्टिरुत्तरोत्तरप्रभातनिष्पादिकेत्यर्थः । * * *

வென்றால் புதிதாய் விவாகமான ஸ்திரீ தொடர்ச்சியாகக் குழந்தைகளைப் பெறுகிறதுபோலவாம்." தைத்திரிய பிராமணத்தில், பத்னியை அபேக்ஷிக்கிற புருஷன் இந்திரனை அடியில் வருமாறு பிரார்த்திக்கிறான். 22 "ஓ இந்திரா, ஸ்வர்ணம் போலவும், என் மேல் பிரியமுள்ளவளும், என்னுடன் சங்கமம் செய்வதில் ஆவலுள்ளவளுமான ஒரு ஸ்திரீயை எனக்குக் கொடு."

## 7. ஒரு புறனடை.

வேதத்தில் சொல்லியிருக்கிற காலங்களில், ருதுவான மேலும் புருஷனுடன்கூடி வாழும்படியான நிலமையிலும் ஸ்திரீகளுக்கு (இவர்களுக்குக் கன்னிகைகள் என்றபெயர் வழங்கியிருக்கிறதைக் கவனியுங்கள்) விவாகம் செய்திருக்கிறார்கள் என்று வேத ஆதாரமான வாக்கியங்களால் ஏற்படுகிறது. ஆனால் ஆர். ஸி. தத்தர் என்பவர் சொல்லுகிறபடி காவியங்கள் தலைப்பட்டகாலத்தில், இந்தியாவில், ருதுவாகிறதற்கு முன்

---

22. सकूतिमिन्द्र सच्युतिम् । सच्युतिं जघनच्युतिम् । कनात्काभां न आभर । प्रयप्सन्निव सक्थ्यौ । Com. हे इन्द्र कनात्काभां कनकवद्भासमानां रूपवतींकन्यां नो अस्मदर्थे आभर आनय । सकूतिं कूतिः आकूतिः सङ्कल्पः तेन सहितां अस्मास्वनुरक्तामित्यर्थः । सच्युतिं च्युतिः क्षरणं वीर्यस्यन्दनं तेन सहितां अनुरागातिशयेन हि सहसा वीर्यं स्यन्दति । एतदेवपुनः सच्युतिमित्यनूद्य जघनच्युतिमित्यनेन व्याख्यायते । आहरणे दृष्टान्तः सक्थ्यौ प्रयप्सन्निव यथा अत्यन्तं कामुकः ऊरुद्वयं प्रति यन्धुमुद्युक्तः अत्यन्तादरेण स्त्रियमावहतितद्वत् ।

விவாகம்செய்கிற வழக்கம் ஏற்பட்டதென்று, ஒருவாக்கியத்தால் தெரியவருகிறது. ஆனால் அவ்விதமான வழக்கம் உண்டானது என்பதைப்பற்றிய காரணத்தைத் திட்டவட்டமாக இதுதான் என்று சொல்லமுடியாது. அதன் அனுஷ்டானமும் சொற்பமாக இருந்தபடியால்தான் அதைப்பற்றிய பிரஸ்தாபம் ஏற்பட நேரிட்டது. சாந்தோக்ய உபநிஷத்தில் ஆதியில் வருமாறு [23] சொல்லப்பட்டிருக்கிறது.

"இடியாலும் ஆலங்கட்டியாலும் குருதேசத்தில், பஞ்சம் நேர்ந்தது. அக்காலத்தில் உஷஸ்திசாக்கிராயணர் என்பவர் ருதுவாகாத தன் பத்தினியுடன் வருந்தமுற்று யானைகளின் பாகர்கள் இருக்கின்ற கிராமத்துக்குப்போனார்."

## 8 ஸ்மிருதிகள் கிருஹ்யசூத்திர தர்மசூத்திரங்கள்.

வேதத்தின் பிரஸ்தாபத்தை இப்போது நிறுத்துவோம். மனுஷ்யரால் ஏற்படுத்தியவும் வேதத்தை ஆதாரமாகக் கொண்டவையுமான, ஸ்மிருதிகளைப் பார்ப்போம். ஸ்மிருதிகள் இருவகையானவை — சில சூத்திரரூபமாக இருக்கின்றவைகள்; சில சுலோகரூபமாக இருக்கின்றவைகள். சுலோக ரூபமாக உள்ள

[23] भटचीहतेषु कुरुष्वाटिक्या सहजाययोषस्तिर्ह चाक्रायण इभ्यग्रामे प्रद्राणक उवास । Sankara interprets आटिक्या as अनुपजातपयोधरादिस्त्रीव्यञ्जनया । Madhavacharya reads आढक्या and quotes, in explanation of the word आसन्नार्तवा योषिदाढकीत्यभिधीयते ।

ஸ்மிருதிகளைககாட்டிலும (மனுஸ்மிருதியும் இதனுள அடங்கும) சூத்திரரூபமான ஸ்மிருதிகள, பிராசீன மானவைகளாம். கிருஹ்ய சூத்திரத்தையாவது அல லது தர்மசூத்திரத்தையாவது நாம் பரிசீலனைசெய் வோம். முன் பிரஸ்தாபித்துளள கிருஹ்ய சூத்திரக் காரர்களில், இருவர், கிருஹ்யசூத்திரஙகளும், தர்ம சூத்திரஙகளும் செயதிருக்கின்றனர்கள. இவர்களால் ஏற்பட்டுளள இரண்டு சூத்திரஙகளையும் சேர்த்து முத லில், விசாரிப்போம். மற்றவர்களைப்பற்றி விசாரிப்ப தில, இவ்விருவகையான சூத்திரஙகளைப பிரத்தியேக மாகப் பரிசோதிபபோம். ஒவ்வொரு கிருஹ்ய சூத் திரத்தில் விவாக பிரகரணத்தின் தொடக்கத்தில, விவாக வருஷத்தில இன்ன இன்ன காலததில் செய்ய லாம் என்பதையும், கன்னிகைகளைத் தெரிந்து எடுப் பதில், பநதுத்துவத்தின் வரம்பையும இன்ன இன்ன குணஙகள உளள கன்னிகையை அஙகீகரித்துககொள ளலாம் என்பதையும், இன்னகுணம் அலலது குற்ற முளள கன்னிகைகள கூடாது என்பதையும்பற்றி விதிகள சொலலப்பட்டுளளன. ருதுவான கன்னி கையை விவாகம செய்யககூடாது என்பது ரிஷிகளின் அபிப்பிராயமாக இருக்கும் பட்சத்தில், இந்தப்பிரகர ணத்தின் தொடக்கத்தில், மற்ற நிபநதனைகளைப் போல், சில ரிஷிகளாயினும் இத்தகைய கன்னிகைகள் விவாகத்துக்கு அருகர்கள் அல்ல என்று எச்சரிக் கையாகச் சொல்லியிருக்கலாம். அப்படியில்லாமல் இருக்குமாயின், சாஸ்திரமானது, ருதுவானமேல்

விவாகம் செய்யலாம் என்று அனுமதி கொடுத்திருக்கிறது என்பதை நாம் யூகிப்பது அயுக்தமன்று.

**சாங்காயினர்** —"உத்தராயணத்தில், சுக்கில பக்ஷத்தில், சுபதினத்தில், கல்யாண லக்ஷணங்களும், அங்கங்கள் நேர்மையாகவும் மிருதுவான மயிரும், கழுத்தில் வலது புறத்தில் இரண்டு சுருட்டைகளும் உள்ளவளுமான **ஸ்திரீயை** புருஷன் பாணிக்ரகணம் செய்ய வேண்டும்." இந்த இடத்தில் ருதுவான **ஸ்திரீயின்** விவாகம் தடுக்கப்படவில்லை.

**ஆசுவலாயனர்** —[24] "மேதையும், அழகும், சீலமும் கல்யாண லக்ஷணங்களும் உள்ளவளும், வியாதியற்றவளுமான **ஸ்திரீயை** புருஷன் விவாகம் செய்து கொள்ள வேண்டும்." இவரும்— ருதுவான **ஸ்திரீயைக்** கல்யாணம் செய்யக்கூடாது என்று சொல்லவில்லை.

**காலாமிர்தம்** :—என்ற கிரந்தத்தில், இந்த ரிஷியின் வாக்கியங்கள் என்று (பாஷையிலேயே பிற்காலத்தின் சின்னங்களுள்ள) சில [25] சுலோகங்கள் மேற்கோளாக உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளின்

---

24 बुद्धिरूपशीललक्षणसम्पन्नामरोगामुपयच्छेत। Adhyaya 1. Kandika 5, Sutra 3

25 कन्यामृतुमतीं शुद्धां कृत्वानिष्कृतिमात्मनः।
शुद्धिं च कारयित्वा तामुद्वहेदानृशंसधीः॥
पिता ऋतूंस्त्वपुत्र्यास्तु गणयेदादितः सुधीः।
दानावधि गृहे यत्नात्पालयेच्च रजोवतीम्॥
दद्यात्तदनुसंख्या गाः शक्तः कन्या पिता यदि।
दातव्यैका ऽपि निःस्वेन दाने तस्या यथाविधि॥

கருத்து இதுவாம் :—விவாகத்திற்கு முன், கன்னிகை ருதுவாகி இருந்தால், கன்னிகாதான காலத்தில், பிதாவானவர், சில பிராயச்சித்த கிரியைகளால் தம்மையும் தம்புத்திரியையும் சுத்தம் செய்துகொள்ள வேண்டும். மேலும், எத்தனை ருது ஸ்நானம் தம்புத்திரி செய்திருக்கிறாளோ, அத்தனை பசுக்களைத் தானம் செய்ய வேண்டும். அப்படிச் செய்ய திரவியசக்தி யில்லாவிடில், ஒரு பசுவையாவது தானம் செய்யவேண்டும்.

**ஆசுவலாயனர்** :—செயத்தப சூத்திரம்—இப்போது அகப்படவில்லை. அதனுடைய, மற்ற சுலோகங்களை அவருடையவைதாம் என்று நிர்ணயிக்கக்கூடவில்லை. இத்தகைய ஸ்திரீயின் விவாகத்தை விலக்கவேண்டுமென்று சொல்லக் கூடிய சந்தர்ப்பத்தில், அந்த ரிஷி அவ்விப்பிராயத்தைக் காட்டக்கூடிய ஒருவார்த்தையையாவது சொன்னாரில்லை. மேலும் யாவரும் எளிதில் செய்யக்கூடிய பிராயச்சித்தத்தை மாத்திரம் விதித்தாரே அல்லாமல், பிதாவுக்காவது, புத்திரிக்காவது மாப்பிள்ளைக்காவது, ஒரு தோஷத்தையும் சொன்னாரில்லை.

**ஜைமினி** :—அநக்கினிகாவாகவும் ஒரே ஜாதியாகவும் அந்நியகோத்திரத்தில் பிறந்தவளாகவும், தாயாருக்குச் சபிண்டியாக இல்லாதவளாகவுமான ஸ்திரீயைத்தன்னுடைய மாதா பிதாக்களின் அனுமதியின் மேல் ஒருவன் விவாகம் செய்யவேண்டியது.

**அநக்கினிகா** :—என்ற பதத்திற்கு, **ஸ்ரீநிவாசாத்துவரி** என்பார் வியாக்கியானம் செய்திருப்பதாவது:—நிர்

வாணமாக இருக்கிறதில் வெட்கப்பட்டு, தானாகவே வஸ்திரம் தரிக்கிறவள் என்று அர்த்தம்.[26] நக்கிரகாரர் என்பவர் ‘நக்னிகா’ என்ற வார்த்தைக்கு அர்த்தம் செய்திருக்கிறதை ஆதாரமாகக்கொண்டு இவர் இப்படி வியாக்யானம் செய்திருக்கிறார். [27] “நக்னிகா— வஸ்திரம் தரிக்காமல், தெருப்புழுதியில் விளையாடிக் கொண்டு, லஜ்ஜை தெரியாத கன்னிகை என்பது அர்த்தம். புருஷர்கள் முன், புருஷர்களுக்கு முன்னிலையில், மானத்தைக் காப்பாற்ற வஸ்திரம் தரித்துக்கொள்ளாத வயதாயில் அந்தக் கன்னிகைக்கு நக்னிகா என்று பெயர்.’ வியாகரண 4-ம் பாகத்தில் அந்ருது சமீபத்தில் நவமதினத்தில், ஸ்திரீ புருஷ சங்கமம் செய்யவேண்டுமென்று இங்கு ஜைமினியே விதித்திருக்கிறார் என்பதை நாம் ஞாபகத்துக்குக் கொண்டு வர வேண்டும். இப்போது அர்த்தமான பிரஸ்தாபித்த “அநக்னிகாவான கன்னிகையுடன் சங்கமம் முடியாது. அசம்பாவிதமாம். ஆனால், சரியான அர்த்த

---

26 अनग्निका यस्मिन्वयसि स्वयमेव लज्जया वासः परिदधाति तद्वयस्काम् ।

27 यावच्चेलं नगृह्णाति यावत्क्रीडतिपांसुभिः ।
यावद्दोषं न जानाति तावद्भवति नग्निका ॥
यावन्न लज्जयाऽङ्गानि कन्या पुरुषसन्निधौ ।
जान्वादीन्यवगूहेत तावद्भवति नग्निका ॥

In *Parasara-Madhaviyam* these two verses are quoted with the word कन्यका in the place of नग्निका The effect of the alteration is obvious.

ரங்களைக்கொண்டு ரிஷியின் விதிவாக்கியத்திற்கு நேர்மையும் பொருத்தமுமானபடி 'அநக்கினிகா' என்ற பதத்திற்கு அர்த்தம் கண்டுபிடிக்கவேண்டும். ருதுவான ஸ்திரீயின் விவாகத்தை ஆதரிக்குமென்று, வியாக்கியாதா சரியான அர்த்தத்தைச் சொல்லவில்லை. **ஜைமினி** ரிஷியின் வாக்கியத்தை முன்பின் விரோதமில்லாமல் அர்த்தம் செய்யவேண்டுமல்லவா? பின்காலத்திய அபிப்பிராயத்துக்கு இணங்கும்படி விபரீத அர்த்தம் செய்தல் சரி அன்றே! "நக்கினிகா" என்ற பதத்திற்கு அமரஸிம்ஹர் அர்த்தம் செய்திருக்கிறதாவது:—"ருதுவாகாத ஸ்திரீ"[28] இதினால "அநக்கினிகா" என்ற பதத்திற்கு—"ருதுவானஸ்திரீ" என்று அர்த்தம் சித்திக்கிறது. அத்தன்மையான ஸ்திரீயுடன், ரிஷிவிதிப்படி சங்கமம் கூடுமென்று ஏற்படுகிறது. இந்தப்பெயர்போன நிகண்டுக்காரரை விட இன்னும் மேல் ஆதாரம் நமக்கு இருக்கிறது.

**ஜைமினி** சாலங்காயன சாக்ருத க்ருஹ்ய காரராகிய கோபிலரின் புத்திரர்—தம்முடைய பிதாவின் சூத்திரங்களுக்குப் பாஷ்யமாக உள்ள ஒருபுஸ்தகத்தில் அடியில் வருமாறு சொல்லுகிறார்[29] "ருதுவாகாதவரையில் அந்த ஸ்திரீக்கு "நக்கினிகா" என்று பெயர்.

---

28. नग्निका ऽनागतार्तवा ।

29. नग्निकां तु वदेत्कन्यां यावन्नर्तुमती भवेत् ॥
ऋतुमती त्वनग्निका तां प्रयच्छेत्तु नग्निकाम् ॥

ருதுவான உடனே, " அநக்கினிகா " என்று பெயர். ஜைமினி வியாக்கியாதாவின் அபிப்பிராயம் எப்படியிருந்தாலும் அந்த ரிஷியின் அபிப்பிராயத்தில், ருதுவானமேல் விவாகம் செய்தல், விதி என்று தெளிவாய் ஏற்படுகிறது.

**கோபிலர்** :— இந்தக் கிருஹ்யசூத்திரத்தில், 4-ம் ராத்திரி ஸ்திரீ புருஷ சங்கமம் கூடாதென்று விதித்திருக்கிறது. இந்தச் சூத்திரகாரர் அபிப்பிராயத்தில் விவாகத்திற்கு உயர்ந்த தகுதியான கன்னிகை " நக்னிகை " யாம். **உப்தாஸதீசரக்கிராயணர்** காலம் முதற்கொண்டு, ருதுவாகாத கன்னிகைகளின் விவாகம், மேன் மேலும் அனுஷ்டானத்திற்கு வந்துகொண்டிருந்தது எனத்தெரிய வருகிறது. **கோபிலர்** ருதுவாகாத ஸ்திரீயின் விவாகம்தான் நல்லது என்று அபிப்பிராயமுள்ளவராயினும், முந்திய வழக்கத்தை நிஷேதிக்கத் தைரியமில்லாதவராக இருந்தார். அவர் வியாக்கியாதா நிரம்பபாடித்தவர் எனத் தெரியவருகிறது. ஸ்திரீயானவள் அபக்குவியாக இருந்தாலும் விவாகமான நாலாம் ராத்திரி சங்கமம் வேண்டுமென்று விதிக்கிறார். ருது காலத்திற்கு முன்னரே, காமத்தினவு ஏற்படுகிறதென்றும், புருஷன் அதைத் திருப்தி செய்யாமற்போனல், வேறு அக்கிரமமான காரியத்தை ஸ்திரீ செய்வாள் என்றும் அவர் சொல்லுகிறார். அநேக தலைமுறைகளாக, ருதுவாகாத கன்னிகைகளும் அவர்கள் புருஷர்களும் சேர்ந்து படுத்துக்கொண்டுவரும் இயற்கை விரோதமான கெட்ட வழக்கம்

வழங்கும் வட நாடுகளின் சீர்கேடான அபிப்பிராயத்துக்கு ஒத்ததாகவும் அவ்வழக்கத்திற்கே பூர்வீக சூத்திரத்தின் ஆதாரம் தேடவும் ஆவல் கொண்டவராக இவ்வியாக்கியாதா ஏற்பட்டுள்ளார். ஆனால் **கோபிலர்** தம்முடைய கருத்தின்படி, ருதுவாகுமுன் ஸ்திரீ விவாக ஸமய மென்றும் நாலாம் இராத்திரி, சங்கமம் கூடாதென்றும் விதிக்கிறார்.

அவருடைய புத்திரர் முன்பு பிரஸ்தாபித்துள்ளவர். “நக்கினிகா” வின் விவாகம் சிலாக்கியம் என்று தம் பிதா சொல்லியிருப்பதை நாலு சுலோகங்களால் ஆதரிக்கிறார். அவைகள் பச்சை பச்சையான வைகளாக இருப்பினும், கவனிக்கத்தக்கவைகள். “**ருதுகாலம்** வரை ஒரு ஸ்திரீயின் பெயர் **நக்கினிகா** என்று பெயர். அதற்குப் பிறகு “**அநக்கினிகா**” என்று பெயர். மாசத்திற்கு ஒரு முறை சம்பவிக்கிறது. அது உண்டாகுமுன், அவளுக்குக் **கவுரி** என்று பெயர்; அஃது ஆரம்பித்த பிறகு ரோகிணி என்று பெயர். மானஸ்தானத்தில் மயிர் முளைக்காமல் இருந்தால் “கன்னியா” என்று பெயர். ஸ்தனம் உண்டாகாமலிருந்தால் நக்கினிகா என்றும் பெயர். மயிர் முளைக்க ஆரம்பித்தால் **சோமன்** அவளை அனுபவிக்கிறான் ஸ்தனம் பெருக்க ஆரம்பித்தால், **கந்தர்வன்** அனுபவிக்கிறான். மாச ருது சம்பவம் ஆரம்பித்தால் **அக்கினி** அனுபவிக்கிறான் என்று சொல்லப்படுகிறது. மயிர், ஸ்தனம், பஹிஷ்டை, இவைகள் தோன்றுமுன், ஒரு ஸ்திரீயின் விவாகம் ஏற்படுவது மஹா சிலாக்கியமானது. ஏனென்

ருல், அவளை ஒருவராலும் அனுபவிக்கப்படாமல் சுத்தமாக இருப்பாள்.[30] இப்போதுதான், பாலியமான குழந்தைகளின் விவாகத்திற்கு ஒரு சமாதானம் முதல் முதல் பிரஸ்தாபிக்கப் படுகிறதைக் காண்கிறோம். பிந்திய ஸ்மிருதிகர்த்தர்கள் இதை முக்கியமான ஆதாரமாகக்கைக்கொள்ளுவார்கள். ஆனால் பண்டைக் காலத்திய, சுகமானவும் கலஹமில்லாதவும் சேர்மைப் பற்றியவுமான உயர்ந்த மனோபாவத்தை விட்டு எவ்வளவு தூரம் விலகிவிட்டோம் என்பதைப் பாருங்கள். அக்காலத்திலே தேவதைகள் (சோமன், கந்தர்வன், அக்கினி) சம்பந்தத்தினால் புனிதமாக்கப் பெற்று அதனால், உயர் நலம் அடைந்த ஸ்திரீயை தேவர்களால் கொடுக்கப்பட்ட தானமென்று அங்கீகரித்து, ஒரு புருஷன், கர்வத்துடனும் பிரீதியுடனும் மணம் புரிந்தான்! இக்காலத்திய கொள்கை வேதத்திற்கு முற்றும் விரோதமாகவும், வேதத்தையே நிந்தனை செய்கிறதாகவும் இருக்கிறது. இந்த அபிப்பிராயம் நிலை

---

30. नग्निकां तु वदे न्कन्या यावन्नर्तुमती भवेत् ।
ऋतुमती त्वनग्निका तां प्रयच्छेत्तु नग्निकाम् ॥
अप्राप्तरजसा गौरी प्राप्ते रजसि रोहणी ।
अव्यञ्जता भवे त्कन्या कुचहीना च नग्निका ॥
व्यञ्जनैस्तु समुत्पन्नैः सोमो भुञ्जीतकन्यकाम् ।
पयोधरैस्तु गन्धर्वो रजसाग्निः प्रकीर्तितः ॥
तस्माद्व्यञ्जनोपेता मरजामपयोधराम् ।
अभुक्तांचैव सोमाद्यैः कन्यकां तु प्रशस्यते ॥ Grihyasangraha.

நிற்காது. "சம்வர்த்தம" என்பதுதான் இந்த நிந்தனையைப் பின்னால திரும்பவும் செய்யத் துணிந்தது. மனு சொல்லுகிறதாவது உன் பத்னியைத் தேவர்கள கொடுத்திருக்கிறார்கள ; ஆதலால அவளைப் போற்றுவாய ; அவள உன்மேல பிரியமில்லாமலிருந்தாலும் போற்றுவாய். [31] வசிஷ்டர் சொல்லுகிறதாவது :—தேவர்கள அவளை அனுபவித்தார்கள. யாதொரு தோஷமும பாபமும அவளைப் பற்றி நெடுங்காலம தங்காது. ஒவ்வொரு ருது காலத்திலும் அது நீங்கிவிடும. [32] வேறு ஒருரிஷி சொல்லுகிறதாவது [33] ஒருசோர புருஷனால அவளுக்கு தோஷத்தை உண்டு பண்ணமுடியாது ; அவனால அவள கர்ப்பமானாலும், ஒரு தோஷமும இல்லை, என்னென்றால, குழந்தை பிறந்தவுடன் தன்னுடைய பூர்வசுத்தத்தன்மையை திரும்ப அடைகிறாள. சோமன், ஸ்திரீக்கு சுத்

---

31. देवदत्ता पतिर्भार्यां विन्दते नेच्छयात्मनः ।
तदेना बिभृयान्नित्य देवाना प्रियमाचरन् ॥ மனு.

32 स्त्रियः पवित्रमतुलं नैता दुष्यन्ति कर्हिचित् ।
मासिमासि रजोह्यासा दुष्कृतान्यपकर्षति ॥
पूर्वं स्त्रियः सुरै भुक्ताः सोमगन्धर्ववह्निभिः ।
गच्छन्ति मानुषान्पश्चा नैतादुष्यन्ति धर्मतः ॥வஸிஷ்ட.

33. असवर्णेन यो गर्भः स्त्रीणां योनौ निषिच्यते ।
अशुद्धा तु भवेन्नारी यावच्छल्यं न मुञ्चति ॥
निःसृते तु ततः शल्ये रजसोऽपीह दर्शनात् ।
ततः सा शुध्यते नारी विमला काञ्चनोपमा ॥ அத்திரி.

த்தையும், கந்தர்வன் இனியவாக்கையும், அக்கினி, என்ன வந்தாலும் அதைத்தகித்து. சுத்தம் பண்ணும் சுபாவத்தையும் கொடுக்கிறார்கள் என்று சொல்லியிருக்கிறது [34]

**பாரஸ்கரர்** :—"உத்தராயணத்தில், சுக்கில பக்ஷத்தில், ஒரு **குமாரி**யை ஒருவன் பாணிக்கிரகணம் செய்ய வேண்டும்." "குமாரி" என்ற பதத்திற்கு **ஹரிஹரர்** என்பார் வியாக்கியானம் செய்திருக்கிறார். அதாவது :—"வேறு ஒருவனுக்குச் சொந்தமில்லாக் கன்னிகை" **குமாரி**, **கன்னிகை** இவ்விரண்டு பதங்களும் பரியாய பதங்கள் ஒரே அர்த்தத்தைக் குறிக்கின்றவைகள். **புருஷர்களுடன் சம்பர்க்கம் (செய்யாத ஸ்திரீகள்** என்று அர்த்தம். அவர்கள் ருதுவாகி இருக்கலாம். அந்த வார்த்தைகளைப்பற்றிப் பின்விஸ்தாரமாகப் பிரஸ்தாபிப்போம்

சூத்திரத்தின் வியாக்கியானத்தில், பாஷியக்காரரான **பதஞ்சலி** ரிஷி சொல்லுகிறதாவது "புருஷர் சங்கமம் அனுபவிக்காத ஸ்திரீக்குக் குமாரி என்று பெயர் [35]. இந்தக் கிருஹ்ய சூத்திரக்காரரின்படி, கல்லியாணத்தின் முதல் நாளில், தம்பதிகள் ஒருவர் மற்ற

34 तासां सोमो ऽददच्छौचं गन्धर्वः शिक्षितां गिरम् ।
अग्निश्च सर्वभक्षत्वं तस्मान्निष्कल्मषाः स्त्रियः ॥ வசிஷ்ட

35. कथं तर्हि वयो गम्यते । संबन्धाद्वयो गम्यते । कोऽसौ संबन्धः । योऽसौ पुंसा सहासंयोगः ।

வருடைய முகத்தைப் பார்க்கையில் [36] புருஷன் சொல்லவேண்டிய ஸ்லோகங்களில் அடியில் குறிப்பிட்டிருக்கிற ஸ்லோகமும் ஒன்று. ஸ்திரீயைப் பார்த்தமாத்திரத்திலேயே காமவிகாரங்களான எண்ணங்கள் எவன் மனத்தில் உண்டாகுமோ அவன்தான் சொல்லக்கூடும். இந்தக் கிருஹ்ய சூத்திரத்தின் வியாக்கியாதா சதுர்த்தி ஹோமம், செய்த பின்மேல், அஃதாவது 5-ம் நாள் முதற்கொண்டு சங்கமம் கூடுமென்று அர்த்தம் செய்திருக்கிறார். **பாரஸ்கரர்** ருதுவான மேல் விவாகம் செய்யவேண்டுமென்ற பக்ஷத்தை ஆதரிக்கிறார்.

**மனு** — தன்னைவிட வயதில் இளையவளாகவும் தன்னுடைய ஜாதியிற் பிறந்தவளாகவும், அன்னிய பிரவரத்தில் சேர்ந்தவளாகவும், நல்ல பந்துக்களை உள்ளவளாகவும், முன் புருஷசம்போகமில்லாதவளாகவும், இருக்கின்றவளை, ஒருவன் விவாகம் செய்யவேண்டும். அவள் நக்கினிகா என்று சொல்லப்படுவாள். இந்த விவாகம் அங்கீகரிக்கத் தக்கது. முன் அடிக்குறிப்புகள் 26-27 28 களில் விஸ்தரித்திருக்கிறபடி, "நக்கினிகா"—என்ற பதத்துக்கு, "புருஷனுடன் சம்போகம் செய்யாதவள்" என்று அர்த்தம் சூத்திரத்திற்கு வியக்தமான தாத்பரியம் செய்தல் கூடாமையாக இருக்கிறது. வேறுபாடாந்தரத்தில், "அநக்

---

36. सानः पूषा शिवतमा मेरयसा न ऊरू उशती विहर ।
यस्यामुशन्तः प्रहराम शेपं यस्यानुकामाबहवो निविष्ट्या ॥

கினிகா " என்ற பதம் உபயோகிக்கப் பட்டிருக்கிறது. அதற்கு அர்த்தம்=ருதுவானவள (29) "கற்பு அறியாத ருதுவான பெண்" என்றால அறிவுக்கு ஒத்ததாக இருக்கும். வியாக்யாதா, முதற் பாடத்தினுள்ள பதத்திற்கு அர்த்தம் செய்வதில் சங்கைப் படுகிறார். ஆதலால் "நக்கினிகா" என்ற பதத்திற்கு—நிர்வாணமுள்ள பெண் என்றும், இப்பெண்ணின் விவாகம் அதிக திருப்தியான தென்றும் அபிப்பிராயப் படுகிறார். அத்தருணத்திற்றான், பெண்ணின் வளப்பு முதலியவைகள யாவருக்கும் புலப்படுமென்றும் கூறுகிறார். இவ்விதம் விரும்பப் படும் பெண்ணின் கதியை நினைக்க, மனத்தில் பரிதாபமும் பயமும் ஜனிக்கிறது. இந்தக் கிருஹ்ய சூத்திரப்படி, விவாகத்தின், அங்கமாக "சம்போகம்" முக்கியமாக வேண்டுவது என்று இருக்கின்றமையால் 'அநக்கினிகா" என்ற பாடமே சரியானது என்று மதிக்கலாகும்.

**போதாயனம்.** இவருடைய கிருஹ்ய சூத்திரத்தில் ஸ்திரீயின் வயதைக் குறிப்பிடுகிற வாசகம் இல்லை. ஆனால் **தர்மசூத்திரம்** ஒன்று இவர்செய்துள்ளார். அதின் 4-ம் பிரசனம், 1-ம் அத்தியாயத்தில் நாம் எடுத்த விஷயத்தைப்பற்றிய சில சுலோகங்களிருக்கின்றன. பூலர் (Dr. Buhler) மாக்டொனல் (Macdonnel) என்ற பண்டிதர்கள், இந்த நாலாம் பிரசனம் பின்னால் சேர்க்கப்பட்டுள்ளது என்று அபிப்பிராயப் படுகிறார்கள்.

இதன் வியாக்கியாதாக்களில் ஒருவரான **கோவிந்த ஸ்வாமி** என்பார் இந்த அபிப்பிராயத்தை ஆதரிக்கிறார் அந்த அபிப்பிராயம் கொள்ளவதற்குள்ள நியாயங்கள நிரம்ப திருப்தியாக இருக்கின்றன. அவைகளை இங்கே பிரஸ்தாபிக்கல அநாவசியம். [37] அவர்கள இந்த விஷயத்தில் சொல்லும் நியாயஙகளுடன், இன்னும் ஒரு நியாயமும் உள்ளது. மற்றவையை விட இஃது அதிகப்பொருத்தமாகவுள்ளது. இந்தக் கிருஹ்ய காரரின் ஆக்ஷேபணை இல்லாத மற்ற விதிகளுக்கு முற்றும் விரோதமாக இந்தச்சுலோகங்கள் இருக்கின்றன. அவர் (**योनिर्विवृणानम्**) சொல்லியிருக்கிறதையும் அதுசம்பந்தமான பச்சையாக உள்ளமந்திரத்திரத்தை இப்போது ருபபத்திற்குக் கொண்டுவரலாம். மேலும் அந்தச் சுலோகங்கள தாம் என்ன சொல்லுகின்றன எனப்பார்ப்போம்.

" பிதாவானவன், நற்குணமுள்ள ஒரு பிரஹ்மசாரிக்கு, ருதுவாகுமுன் தன்னுடைய குமாரியை விவாகம் செய்து கொடுக்க வேண்டும். நற்குண மில்லாதவனுக்குக் கொடுத்தாலும் கொடுக்கலாம், ருதுவானமேல் தன் பெண்ணைக் கிருகத்தில் கல்லியாண மில்லாமல்

---

([37] பூஹ்லர் என்பாரின் போதாயனர் தர்ம சூத்திரத்தின் மொழி பெயர்ப்பின் முகவுரை 32 முதல் 35-ம் பக்கத்தையும் ஸம்ஸ்கிருத பாஷையின் சரிதமென்று, மக்டோனல் எழுதியிருக்கும் புஸ்தகத்தின் 260-ம் பக்கத்தையும் பார்க்க).

வைத்துக்கொள்ளக்கூடாது. ருதுவாகி, மூன்று வருஷத்திற்குள்ளே தன் புத்திரிக்கு விவாகம் செய்யாமல் இருந்தால், தகப்பன், கர்ப்பத்தை அழித்த தோஷத்திற்குள்ளாவான். ஒருவனும் தன் பெண்ணை விவாகம் செய்துகொள்ள வேண்டுமென்று கேட்காமற் போனால் இது நேரிடும். யாரேனும ஒருவன் கேட்டும் (தகப்பன் விவாகம் செய்யாவிடில்) ஒவ்வொரு ருது காலத்திலும், கர்ப்பத்தை அழித்த தோஷம் பிதாவுக்குச் சம்பவிக்கும். இவ்விதம் மனு சொலலியிருக்கிறார். ருதுவான மேல், கன்னிகையானவள 3 வருஷகாலம் தன் பிதாவின் ஆஞ்ஞைக்குக் கட்டுபட்டவளாகக் காத்திருக்க வேண்டும். அதன் மேல், தன்னுடைய அந்தஸ்த்துக்குத் தகுதியான ஒரு புருஷனைத் தானே தேடிக்கொளளவேண்டும். அப்படிப் பட்ட புருஷன் கிடைக்காமற் போனால், நற்குணமில்லாதவனாக இருந்தாலும் அவனை அடையலாம்." தற் காலத்தில் வழங்குகிற மனுஸ்மிருதியில்—இப்போது பிரஸ்தாபித்துளள வசனம் இல்லை உண்மையில், இந்த வசனமானது, மனுவின் விதிக்கும் நிசேஷத்திற்கும் அப்பால் கடந்து வெகுதூரம் செல்லுகின்றது; பிற்பட்டார் ஒருவர் அந்தக் கம்பீரமான, பேரின் கீழ் இந்த வசனத்தை ஏற்படுத்தியுள்ளார் என அனுமானிக்க வேண்டியதாக விருக்கிறது ஒவ்வொரு ருது காலத்திலும் கர்ப்பம் தரிக்கும்படியான ஹேது இருக்கிறதென்பதை எள்வளவு தூரம் சாதிக்கலாமோ

அதுவரை கக்ஷி சொல்லியிருக்கிறது **போதாயன நுடைய** தென்று சொல்லப்படுகிற இந்தப் பொய்யான சுலோகங்களின் தாத்பரியத்தை விவரமாகச் சுருக்கி தெரிவிப்போம்:—

1. ருதுவாகுமுன், பிதா தன்குமாரியை விவாகம் செய்வித்தல் உத்தமம்.

2. ருதுவானமேல், 3 வருஷத்துக்குள் விவாகம் செய்விக்கலாம்.

3 3 வருஷமானமேல், குமாரியே தன்புருஷனைத் தானே தேடிக்கொள்ளலாம்.

4. இப்படிகேட்டால் சரியானபுருஷன். பெண்ணை விவாகம் செய்துகொள்ளக் கேட்காத பக்ஷத்தில், பிதாகர்ப்பத்தை அழித்த பாபத்தைச் செய்தவனாக ஆகிறான். பிறர்கேட்டும் பிதாகொடாமலிருந்தால், தன்குமாரி எத்தனை ருதுஸ்நானம் செய்திருக்கிறாளோ அத்தனை கர்ப்பத்தை அழித்த தோஷம் பிதாவைப் பிடிக்கும்.

மேற்கண்ட விஷயங்களால். ஏற்படுகிறது என்னவென்றால் ருதுவாகுமுன்னும் **பின்னும்** விவாகம் செய்யலாம் என்பதே.

**ஆபஸ்தம்பர்**:— இந்த விஷயத்தைப்பற்றிய சூத்திரங்கள் அனுபந்தத்தில் சொல்லியிருப்பதைப் பார்த்துக்கொள்ளுக அவைகளில், கடைசியானது இக்காலத்திய உதாரமான அபிப்பிராயத்தை அனுசரித்து நடைபெறுகின்றது. ஆனால் அஃது ஆபஸ்தம்பருடைய அபிப்பிராய மன்று. வேறு ஒருவர் அபிப்பிராயமாம்.

அதன்படி, ஸ்திரீயானவள் தன்னுடைய ரூபலாவண்ணியங்களால் மனத்தைக் கவராதாளாகில், விவாகம் இன்பத்தைத் தரும். அதினால் மற்றொன்றையும் கவனிக்கவேண்டும். ஆனால் அநேகாலத்தில், அநேக வீணான விகாதங்களும் தடைகளும் விதிக்கப்பெற்று இருக்கின்றன. மகாகுச்சப்பந்தமாக, ஒரு விகாதம் ஏற்பட்டிருக்கிறது. அது "ரதாய" என்றவார்த்தையில் இருக்கிறது. இதன் பண்புச் சொல்லின்பொருள் தெளிவாயில்லை. **சுதர்சனாசாரியார்** இதற்கு மூன்றுவிதமான அர்த்தங்கள் சொல்லியிருக்கின்றார். இரண்டு தம்முடையவை, மூன்றாவது வேறு ஒருவருடையது. அவையாவன:— (1) பந்து முதலானவைகளுடன் விளையாடுதல் (2) ருதுவான (3) விஷயசுகத்தில் அழுந்தியிருத்தல்[38]. 3ம் அர்த்தந்தான் ஒப்புக்கொள்ளத்தக்கது. அதுதான், வியக்தமான ஒரு பாவத்தை அறிவிக்கிறது. முதல் அர்த்தம் குற்றமில்லாத விளையாட்டு, அதிகமான தேக செளக்கியத்தையும், உற்சாகத்தையும் காட்டும். யாவரும்வேண்டுமென்று விரும்பக்கூடும். 2-ம் அர்த்தத்தை வைத்துக்கொண்டால் 4 ம் ராத்திரி இந்தக்கிருஹ்யகாரரே விதிக்கிற **சமவேசனம்**" நடத்தமுடியாது. அதனால் அந்த அர்த்தம் அங்கீகரிக்கக் கூடியதன்று. மேலும் இவர்செய்திருக்கிற காமசூத்திரத்தினால் இவர் காலத்

---

[38]. रता रमणशीला कन्दुकादिक्रीडाप्रियेत्यर्थः । ऋतुस्नाता वा । केचित्-रतिशीला विषयोपभोगशीलेत्यर्थः ।

தில் ருதுவான ஸ்திரீகள் விவாகமில்லாமல் இருந்தி ருக்கிறார்கள் என்று மேலெதெரியவருகிறது. அடியில் வருபவை இரண்டாம் பிரச்னம், 26-ம் கண்டம் கடையில் 7 சூத்திரங்களுக்கும், 27 கண்டம் 1-ம் சூத்திரத்திற்கும் தமிழ் மொழிபெயர்ப்பு[39] "நகைகள் அணிந்துகொண்ட ஒருவாலிபன், அந்நியனின் பத்னி, அல்லது விவாகமில்லாத ஸ்திரீ (குமாரி) இருக்கிற இடத்துக்குத் தெரியாமல் பிரவேசிப்பானகில், இன்னா இன்னார் இருக்கிறார் என்று தெரியப்படுத்தி— அவனைப் போகாமல் தடுக்கவேண்டும் வேண்டுமென்று தெரிந்தே கெட்ட நோக்கத்தினால் ஒருவன் போனால், அவனுக்கு அபராதம் விதிக்கவேண்டும். முன்னமேயே விவாகமாகியிருக்கிற ஸ்திரீயுடன் சங்கமம்செய்தால், பீஜம் உள்ள ஆண்குறியைமுற்றும் அறுத்துவிடவேண்டும். குமாரியுடன் சங்கமம்செய்தால், அவன்சொத்தைப் பறிமுதல்செய்தும், அவனைத் தேசத்திற்கு அப்பால் துரத்தவேண்டும். விவாகமான ஸ்திரீயையும், குமாரியையும், அரசன் காப்பாற்றவேண்டும். அவர்கள் இனிப் புருஷசங்கமம் வைக்காமல் தடுக்கப் பெறுவார்கள் ஆனால் விதிப்

---

39. अबुद्धिपूर्वमलङ्कृतो युवा परदारमनुप्रविशन्कुमारीं वा वाचा बाध्यः । बुद्धिपूर्वं तु दुष्टभावो दण्ड्यः । संनिपाते वृत्ते शिश्नच्छेदं सवृषणस्य । कुमार्यां तु स्वान्यादाय नाश्यः । अथ भृत्ये राज्ञा । रक्ष्ये चातऊर्ध्वं मैथुनात् । निर्वेषाभ्युपाये तु स्वामिभ्योऽवसृजेत् । चरिते यथापुरं धर्माधि संबन्धः ।

படி அவர்கள் பிராயச்சித்தம் செய்வார்களாகில், முன் போல தாம்காரியத்துக்கு அருகர்கள் ஆவார்கள் (அதாவது, விவாகமான ஸ்திரீ யாகாதி கிருத்துக்கள் செய்யவும், விவாகமில்லாத குமாரி, விவாகம்செய்து கொள்ளவும் தகுந்தவர்கள் ஆவார்கள். "இந்த இடத்தில் இருக்கின்ற வாசகத்தினால், விவாகமில்லாத ஸ்திரீயும் விவாகமான ஸ்திரீயும் ஒரேமாதிரியாகப் பாவிக்கப்படுகின்றதாகத் தோன்றவில்லையா? இந்த விதமான அர்த்தம் ஏற்படுவதற்குக் குமாரியானவள் பக்குவமுள்ள வயதான ஸ்திரீயாகத்தானே இருந்திருக்க வேண்டும். "குமாரி" என்ற பதத்திற்கு "பதிவரா" என்று பரதிபதம் சொல்லியிருக்கிறார். "புருஷனைத் தேடுகிறவள்" என்பது அதன்பொருள்

**ஆபஸ்தம்பம்** என்ற பெயருள்ள ஒரு ஸ்மிருதி இருக்கிறது அது இவருடையதன்று வேறு ஒருவரால் செய்தது [40] அதன் 7-ம் அதிகாரத்தில் அ 9யில் வரும் முக்கியமான விதி சொல்லியிருக்கிறது "விவாகக்கிரியை நடந்துகொண்டிருக்கையில் ஸ்திரீயானவள் ருதுவாகிவிட்டால் எவ்விதம் ஸமஸ்காரத்தை முடிக்கிறது? அவளுக்கு ஸ்நானம் செய்வித்துப் புதியவஸ்திரம் உடுத்துவித்து, அக்கினியில், சுத்திக்கு வேண்டிய கிரியைகளைச் செய்வித்தமேல். விவாகத்தின் பாக்கி கிரியைகளைச் செய்யற்பாலது.

40. विवाहे वितते यज्ञे संस्कारेचकृतेयदा । रजस्वला भवेत्कन्या संस्कारस्तु कथं भवेत् ॥ स्नापयित्वा तदा कन्यां अन्यवस्त्रैरलङ्कृताम् । पुनर्मध्याहुतिं हुत्वा शेषं कर्म समाचरेत् ॥

இதேமாதிரியான விதி லகு அத்திரிஸ்மிருதியிலு மிருக்கிறது.[41] இது முதல் முதல் ஏற்படும் ருது வாக இருக்கலாம் பிந்தியாக இருக்குமாகில், ருது வான மேல் விவாகம் செய்யலாம் என்பதற்கு இந்த வசனம் ஆதாரமாகும்.

**ஹிரண்ணிய கேசீர்** :- குரு குலத்திலிருந்து திரும்பி வந்த பிறகு, ஒருவன் தன் மாதா பிதாக்களைச் ஸம் ரக்ஷிக்க வேண்டும். அவர்கள் அனுமதியின் மேல், தன் ஜாதியைச் சார்ந்தவளும் கோத்திரதாயாதி யாக இராதவளும் 'நக்கினிகா' வாகவும், புருஷ சங்கமம் செய்யாதவளாகவு மிருக்கின்ற ஸ்திரீயை விவாகம் செய்துகொள்ள வேண்டும். முன் சொல்லி யிருக்கிறபடி, 'நக்கினிகை' இரண்டு அர்த்தத்தி லும் சங்கமம் செய்திருக்க கூடியவள் அல்லள். அப்ப டியானால் இந்த இடத்தில் "புருஷ சங்கமம் இல் லாத நக்கினிகை" என்ற வாசகம் என்னகாரணத் தினால் உபயோகிக்கப் பட்டுள்ளது? இந்தக் கிருஹ்ய சூத்திரப்படி 4-ம் ராத்திரி, புருஷ சங்கம முக்கிய மானது அதினால் இந்தச் சூத்திரத்தின் வியாக்கி யாதா **மாத்ரிதத்தரும்** இந்தக் கிருஹ்ய சூத்திரத்தைப் பற்றி எழுதியிருக்கின்றவரான, பட்டகோபிநாத தீக்ஷி தரும் "நக்கினிகா" என்ற பதத்திற்கு "வஸ்திர

---

41. विवाह वितते तन्त्रे होमकाल उपस्थिते । कन्यामृतुमतीं दृष्ट्वा कथं कुर्वन्ति याज्ञिकाः ॥ हविष्मत्या स्नापयित्वा अन्यवस्त्रैरलङ्कृताम् । युञ्जानामाहुतिं कृत्वा ततः कर्म प्रवर्तते ॥

மில்லாதவள்." ஆகையால் "சங்கமத்திற்குத் தகுந்த வள்" என அர்த்தம் செய்திருக்கிறார்கள். இவர்களில் முன்னவர், தாமுரைத்த அர்த்தத்திற்குப் பாணிநியின் இரண்டு சூத்திரங்களை [42] ஆதாரமாக எடுத்துரைத் திருக்கின்றார். ஆனால் "ருது வாகாத ஸமயம்" என் ற ஒரு வார்த்தையைச் சேர்த்திருக்கிறார். இது, முந்திய அர்த்தத்தை முற்றும் மாற்றிவிடுகிறது. சா தாரண வைதிகர்களைத் திருப்திசெய்யும் பொருட்டெ ன்றோ இப்படிச்சேர்த்திருக்கிறார் என்று அறியவேண் டும். 'நக்நிகா' என்ற வார்த்தை அநேக விஷயங்களுக்குச் சாதகமாக இருக்கின்றது. **சீர்திருத்தஞ் செய்வோன் (The Reformer)** என்ற பத்திரிகை யின் 1906-ஆம் ஸெப்டம்பர் 19உ சஞ்சிகையில் "நக்நிகா" என்ற வார்த்தைக்குப் பதிலாக "அநக் நிகா" என்ற பதமுள்ளதாக இதே சூத்திரத்தை ராவ்பகதூர் சி. வி. வைத்தியா என்பார் ஆதார மாகக் காட்டியிருக்கிறார். இந்த வார்த்தை இருந் தால், கேள்விக்குத் தாத்பரியம் சொல்லுதல் இலகு

---

42 **नग्निकामासन्नार्तवाम् । नग्नपातरपि परिपठितो वस्त्रविक्षेपणार्थः । ततोऽर्हेण्युक्** (Panini III., 3, III) **कर्तरिच** (பாணினி 2-6-16) **स्यात्कृतो बहुलंकृति । तस्माद्वस्त्रविक्षेपणार्हा नाग्निका । मैथुनार्हेत्यर्थः । ब्रह्मचारिणीम् अकृतमैथुनाम् ।** என்று மாத்ருதத்தர் சொல்லி யிருக்கிறார். மேற்சொன்ன தீக்ஷிதர் ஸம்ஸ்கார ரத்னமாலையென்னும் அவர் க்ரந் தத்தில் **नग्निका** என்றால் **मैथुनार्हा** என்று அர்த்தம் சொல்லியிருக்கிறார்.

வாகிவிட்டது. ஜைமினியின் அபிப்பிராயப்படி 'அநக்கினிக்கா' என்றதற்குப் **பிரவுடையான ஸ்திரீ** என்று அர்த்தம்.

**கௌதமர்**:—கௌதமருடைய தர்மசூத்திரம் மற்ற தர்ம சூத்திரங்களைவிட மிகப்பிராசீனமானதென்று எல்லாருடைய அபிப்பிராயம். அவைகளில், ருதுவாகு முன், ஸ்திரீகளுக்கு விவாகம் செய்தல் உத்தமமென்று சொல்லியிருக்கிறது. ருதுவாகாத பாலியமான ஸ்திரீகளுக்கு விவாகம் செய்தல் உத்தமம் என்று சொல்லுகிறவர்கள் முன் சொன்ன இரண்டு ரிஷிகள், இந்தக் கௌதமர் ஆக இம்மூவரும் (அமரா வார் சாந்தோக்கியத்தில் வருகின்ற உஷஸ்தி, கோபிலர், கவுதமர்) இவர்கள் சாமவேதிகளாக இருப்பது முக்கியமாகக் கவனிக்கத்தக்கது புது வழக்கங்கள் இவ்விதமாகத்தான் அனுஷ்டானத்திற்கு வருகின்றன. 'முதலில் வித்வான்கள், செல்வாக்குள்ளவர்கள் அனுஷ்டிப்பார்கள், பிறகு, அவர்களைப்பார்த்து அந்த அந்த வகுப்பில் உள்ளவர்கள் அனுஷ்டிப்பார்கள்; இவ்விதம்பரவும் கௌதமர் சொல்லுகிறார். "மூன்று ருது ஸ்நானம் செய்தாகிவிட்டால், பிதாவால் கொடுக்கப்பெற்ற நகைகளை எறிந்துபோட்டு, ஸ்திரீயானவள் குற்றமில்லாத ஒருபுருஷனைத்தானே மணம் புரியவேண்டும் கன்னிகாதானம் ருதுவாகுமுன் இருக்கவேண்டும் அப்படிக் கொடாதவன், பாவம் செய்தவனாகி ஆகிறான். சிலர் அபிப்பிராயத்தில் வஸ்திரம் தரிக்கும் காலத்திற்குமுன் விவாகம் செய்ய

வேண்டும்". இதில ஒரு விஷயம தெளிவாக இல்லை. பிதாவுக்கு எப்போது பாவம நேரிடுகிறது ருது வாகுமுன் தானம செய்யாததினலா? அலலது 3 ருது நேரிட்டாலா? கன்னிகாதானம செய்யும தன் சுதந்தரத்தை இப்போது இழக்கிருன்? பின்னுள்ள அபிபபிராயம தான் உசிதமானது. மேற்படி வாசகத்தினின்று அடியில வரும தீர்மானஙகள ஏற்படுகின்றன :—

(1) ருதுவாகுமுன் கன்னிகையைத்தானம செய்ய வேண்டும்.

(2) 3 வருஷத்துக்குள அவளைத் தானம செய்யலாம்.

(3) 3. ருதுவானுல ஸ்திரீ தானகவே புருஷனைத் தேடிக்கொளள வேண்டும.

பொயயான போதாயன விதிவாக்கியஙகளுடன் இவைகளை ஒப்பிட்டால், முன்னதில 3 ருதுக்கள் என்றதற்கு பதிலாக 3 வருஷஙகள என்று சொலலியிருக்கிறது.

**கௌதமருடைய** அபிப்பிராயம் நிரம்ப உதாரமானதாக இருக்கிறது. பொயயான போதாயனருடைய விதிகள பிந்தியவை. ஆகையால் அதிக நிபந்தனைகள ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

**வசிஷ்டர்** :—இந்த தர்ம சூத்திரத்தின் மூலவசனம். சமஸ்கிருத பாஷா இலக்கியங்களுக்குள அதிகப்பழுதுக்குட்பட்டதாக இருக்கிறது. பின் பற்பலகாலங்

களில் அநேக சேர்மானங்கள் ஏற்பட்டுள்ளன. அதனால், ஒரு சூத்திரத்தையாவது, அல்லது சேர்ந்தாற்போல சில சூத்திரங்களையாவது ஆதாரமாக வைத்துக்கொண்டு ஓர் அபிப்பிராயம் அல்லது வாதம் சொல்ல இடமில்லாமலிருக்கிறது. முக்கியமாக— “மற்றவர்களும் இவ்விதம் சொல்லுகிறார்கள்.” என்ற வாசகங்கள் சந்தேகத்திற்கிடமாக இருக்கின்றன. இத்தன்மையான சுலோகங்கள் அதிகமாக நிறைந்துள்ளன. பிரகிருத விஷயங்கள் சம்பந்தமாக இப்படித்தான் இருக்கிறது[43]. 17-ம் அதிகாரத்தில் அடியில் வருமாறு காணப்படுகிறது.

59. ருதுவான ஸ்திரீ, தன்னுடைய மாதாபிதாக்களுடன் 3-வருஷம் இருக்கவேண்டும். பிறகு, தனக்குச் சரியான புருஷனை விவாகம் செய்துகொள்ளவேண்டும்.

60. அவர்களும் அதை ஆதரித்து உதாரணமாகச் சொல்லுகிறார்கள்.

61. பிதாவின் தவறால், காலந்தவறி, ஒரு ஸ்திரீயானவள் கொடுக்கப்பெற்றால், காலந்தவறி குருவுக்குக் கொடுக்கும் தக்ஷிணையைப்போல, அவள் கொடுக்கிறவரைச் சங்கரிப்பாள்.

62. ஒருவன், தன் குமாரி ருதுவாகுமுன்னமேயே, கன்னிகாதானம் செய்யவேண்டும். அதற்குமுன் ருதுவாகிவிட்டால், அவனுக்குப் பாவம் சம்பவிக்கும்.

---

43 இந்த எண்ணிக்கைகள் ஆநந்த ஆச்ரமா அச்சாபீஸ் பிரதிப்படி.

63. தாம சாஸ்திரவிதி யென்னவென்றால்:—தனக்குச் சமானமானவன், ஒரு ஸ்திரீயை விவாகம் பண்ணிக்கொள்ளவேண்டுமென்று இச்சித்தால், அவளும் விவாகம் செய்துகொள்ள வேண்டுமென விரும்பினால், அவளை மாதாபிதாக்கள் கொடுக்காமல் இருப்பார்களாகில், எத்தனை ருதுக்கள் ஏற்பட்டிருக்கின்றனவோ அத்தனை கர்ப்பங்களை அவர்கள் அழித்ததாக ஏற்படும்.

64. கன்னிகையின் வாக்குத்தானமும் அதன் அறிகுறியாக ஜலத்தை விடுதலும் ஏற்பட்டு, அச்சமயம் மாப்பிள்ளை மரண மடைந்தால், பரிசுத்தமான மந்திரங்களால் அவள் கொடுக்கப் பெற்றதால், அவள், பிதாவின் சொத்தேயாம்.

65. பலவந்தமாக ஒருவன் ஒரு ஸ்திரீயைத் தூக்கிக் கொண்டு போனால், அவள் மந்திரபூர்வமாகத் தானம் செய்யப்படாமலிருப்பாளானால், சாஸ்திரப்படி, வேறு ஒருவனுக்கு அவளை விவாகத்திற்குத் தானம் செய்யலாம். அவள் கன்னிகையைப் போலவேயாம்.

66. விவாகமான பிறகு, புருஷன் இறந்துபோனால், ஸ்திரீயானவள் மந்திர சமஸ்காரம் மாத்திரம் செய்யப் பெற்றிருந்து சங்கமம் சேராமலிருந்தால், நூதனமாக, வேறு ஒரு விவாக சமஸ்காரத்திற்கு தகுந்தவளாவாள்.

இந்த இடத்தில் "இதி" என்ற வார்த்தை வருகிறது. இதினால், 61 முதல் 66 வரை சுலோகங்கள் வேறு கிரந்த கர்த்தாக்களுடைய புஸ்தகங்களினின்று, எடுக்கப்பட்டவை எனத்தெரிய வருகிறது. 67-வது

சூத்திர முறையாகவுள்ளது; இது புருஷன் தவறிட போய்விட்டால், பத்நி செய்யவேண்டியது இன்னது என்று குறிப்பிடுகிறது.

64-முதல் 66 வரையில் உள்ள சுலோகங்களில் இந்த ஆபத்து (மரணம்) விஷயம் தொனிக்கிறது. 59-ம்சூத்திரத்தின் கீழ் இந்த 64-முதல் 66 வரையுள்ள சுலோகங்களை எடுத்துக்காட்டுவானேன்? வழக்கமாய, முந்திய சூத்திரத்திற் கண்ட விஷயத்தைத் தெளிவு செய்யவோ, ஸ்திரப்படுத்தவோ, ஆதரிக்கவோ அல்லது விஸ்தரிக்கவோ, வேறு இடங்களிலிருந்து வாசகம் எடுத்துக் காட்டுவது உண்டு. 60 - முதல 63 வரை சுலோகங்களுக்கும், 64-முதல் 66 வரை சுலோகங்களுக்கும் ஒன்றுக்கொன்று சம்பந்தம் காணவில்லை. 60-முதல் 63 வரை சுலோகங்கள் 59-ம சூத்திரத்திற்கு நேராக சம்பந்தமில்லை. அவைகள் வேறு பிரகரணங்களைப்பற்றியவை. சூத்திரத்தில் பிரஸ்தாபிக்காத விஷயத்தைப்பற்றி விதிகளையும் நிபந்தனைகளையும் சொல்லுகின்றன. இந்தச் சூத்திரகாரரே இந்த விதிகளையும் இந்த நிபந்தனைகளையும் தாமே தம்முடைய வாசகத்தில், சூத்திரமாகவாவது, சுலோகமாவாவது சொல்லி இருக்க வேண்டுமென்று யாரும் எதிர் பார்க்கக்கூடியது. ஆனாலும் இத்தகைய ஆக்ஷேபணையை அதிகமாக இனிச் சொல்லவேண்டாம். வேறு ஆக்ஷேபனைகள் உள்ளன. ஓர் இடத்தில், ஸ்நாதகனுக்கு விவாகத்தை விதித்திருக்கிற சமயத்தில், (தர்ம சாஸ்திரகர்த்தா சந்தேகத்திற்கு இடமின்றி எல்லா விகா

தங்களையும் சொல்ல வேண்டியது. வசிஷ்டர் சொல்லுகிறதாவது :—“கோபத்தையும் அடக்கி, விளையாட்டுத் தன்மையையும் அகற்றிக் கிருகஸ்த ஆசிரமத்தில் புகவிரும்பும் ஒருவன், தன்னுடைய பெற்றோர் அனுமதிபெற்று, ஸ்நானஞ் செய்துகொண்டு தனக்குச் சமானமான ஜாதியிற் பிறந்தவளாயும், கோத்திர தாயாதியாக இல்லாதவளாயும், புருஷ சங்கமம் முன் இல்லாதவளாயும் தன்னைவிட வயதில் இளையவளாயும் உள்ள ஸ்திரீயை விவாகம் செய்துகொள்ள வேண்டும்.” ருதுவான ஸ்திரீயின் விவாகம் கூடாது என்று, வசிஷ்டர் அபிப்பிராயமாக இருந்தால், மேற்கண்ட வாசகத்தையா சொல்லியிருப்பார்? வேறு வாசகத்தைச் சொல்லியிருக்கமாட்டாரா? அவர் கவலை எல்லாம் வேறு புருஷனால், முன்னால், கற்பழிக்கப்படாமலிருக்க வேண்டுமென்பதேயாம். ருதுவான மேற்றான் அது நேரிடக் கூடியது. மேலும், ஸ்திரீகள் சம்பந்தமாக, வசிஷ்டர், தயையும் ஆதரவுமான அபிப்பிராயம் உள்ளவர். பக்குவமான ஸ்திரீகளின்மேல் இவ்வளவு தப்பெண்ணம் கொண்டிருக்கமாட்டார். ஓர் இடத்தில் அவர் சொல்லுகிறதாவது :—“பக்குவமான பருவத்தை ஒரு ஸ்திரீ அடைந்து, உள்ளபடி பேஷ்டையாகாமல் இருப்பாளாகில், அவள் “அமிர்தம் போன்றவள்” 44. முன் நாம் பிரஸ்தாபித்த பிரகாரம், ஸ்திரீயானவள் எப்போதும் தோஷத்திற்குப் பாத்திர

---

44. अनग्निका अनुदक्या वा अमृतमिति विज्ञायते (Adhyaya 5).

மானவள் அல்லள். ஒவ்வொரு ருதுகாலத்தில், ஏதே ஜும் தோஷம் ஏற்பட்டாலும் அது நீங்கிவிடும். ஒரு வேளை சொல்லலாம். மேற்கண்ட சுலோகங்கள் வஸிஷ்டருடையதாக இல்லாமற் போனால் என்ன? அந்தச் சுலோகங்களை நுழைத்தவர் வஸிஷ்டரைப்போல் உயர்வான அதிகார புருஷராக இருக்கலாமே! 59 முதல் 63 வரையுள்ள சுலோகங்களை நன்றாய்ப் பரீக்ஷிப்போம். கௌதமர், போலி போதாயனர் இவர்களுடைய அபிப்பிராயங்கள், திருப்பி எழுதியவைகளாக இருக்கின்றன. ருதுவாகுமுன் தன் குமாரியை விவாகம் செய்து கொடுக்கவேண்டுமென்ற பிதாவின் உத்தரவாதத்தை வற்புறுத்திக் கூறியிருக்கிறது. கர்ப்பத்தை அழித்தல் என்ற தோஷத்தை அதன் முடிவுவரை சொல்லவில்லை. அதற்குவிலக்குக்கள் ஏற்பட்டுள்ளன. ஸ்திரீயானவள் புருஷனைச் சேரவேண்டுமென்ற இச்சை யுள்ளவளாக இருக்கவேண்டும். அவளுக்குச் சரி சமானமான புருஷன் அவளை விவாகம் செய்ய விரும்பிக் கோரவேண்டும். தன் குமாரி ருதுவாகி 3 வருஷம்வரை பிதா கன்னிகாதானம செய்யும் சுதந்தரத்தைவைத்துக் கொண்டிருக்கின்றமையால், கர்ப்பத்தை அழித்தல் என்ற பாபம் சம்பவிக்கும் என்பதை உள்ளபடி சொல்லர்த்தமாகச் செய்யக்கூடாது. அந்தக் குறிப்பிட்ட காலத்திற்குள்ளாக விவாகம் செய்து கொள்ள, தானம் செய்யவேண்டுமென்பதை விதிக்கின்றதாக நினைக்கவேண்டும்.

## 9 செய்யுள் நடையில் உள்ள ஸ்மிருதிகள்.

**மனு** :—சுலோக நடையிலுள்ள ஸ்மிருதிகளில் மகாப்பிராசீனமானது சந்தேகமில்லாமல் **பிருகு** மகா ரிஷியால் செய்யப்பட்ட ஸ்மிருதி. அதுதான் மனுஸ் மிருதியென்று வழங்குகிறது. அஃது அதற்கு முன் இருந்த மானவ தர்ம சூத்திரமென்றதை ஆதாரமாக உடையது. அதிலிருந்து ஆதாரமான வாக்கியங்கள் மனுஸ்மிருதியில் எடுத்து சொல்லப் பட்டிருக்கின் றன. மேற்படி மானவ தர்ம சூத்திரம் சிலபாகம் செய்யுளாகவும் சில பாகம் நடையாகவுமிருக்கின்றது. பிருகு சம்ஹிதையில் ஆதிமிரந்தத்தின் பாடம் மாறுத லில்லாமல் இருக்க கூடியதன்று. ஏனென்றால் வெகு காலத்திற்குப் பிற்பாடு புதிதான ஒழுக்கங்கள் ஆசா ரங்கள் நடைபெற்ற காலத்திலும் மேற்படி சம்ஹி தையானது தொகுக்கப்பட்ட தாகையால் பூர்வீக ஆசார வழக்கங்களில் மத்தியகாலத்தில் நேர்ந்திருக் கின்ற மாறுதல்களைச் சேர்த்துத் தான்செய்து இருக்க வேண்டுமென்று நாம எதிர்பார்க்கவேண்டியதாயிருக் கிறது. விவாகமானது ஜனசமூகத்தின் மாறக்கூடிய ஓர் அங்கமாக இருக்கிறது. இந்தஸ்மிருதியின் கர்த் தா **மனு** வாயிருந்தாலும் **பிருகு** வாயிருந்தாலும் பிரா சீன தர்மசா**ஸ்திர** **ஸ்**தாபராக எல்லாராலும் வணங் கப்பெறுகிறூர். **ஆசுவலாயனர், போதாயனர், வசிஷ்டர்,** இவர்களுடையவை யென்று முன்னால் பிரஸ்தாபித்து விசாரித்த சுலோகங்களெல்லாம் அநேகமாக **மனு ஸ்மி** ருதிக்குப் பிற்பட்ட காலத்தவைகளாம் **என்று**

நினைக்கக்கூடியதாக இருக்கிறது. மனு ஸ்மிருதி அத்தியாயம் 3-ல் விவாஹத்துக்கு அருகமில்லாத ஸ்திரீகளின் ஜாபிதா இருக்கிறது. இன்னின்ன குடும்பங்களிலிருந்து விவாஹத்திற்கு ஸ்திரீகளை அங்கீகரிக்கக் கூடாதென்று விதித்து அடியில வருமாறு பின்னும் சொல்லுகிறார்:—

8-வது:—செம்பட்டை மயிர் சிவந்தகண், அதிக மயிர் அல்லதுசொற்பமயிர் உள்ளவளும் வழக்கத்துக்குமேல அதிகமான கை, கால, விரல்களுள்ளவளும் அல்லது அதிகப்பேச்சுக்காரியுமான ஸ்திரீகளை விவாகம செய்துகொள்ளக்கூடாது.

9. நக்ஷத்திரம், மரம், நதி, கீழான ஜாதி, மலை, பக்ஷி, சர்ப்பம, இவைகளின் பேருள்ள ஸ்திரீயையும் அடிமையான ஸ்திரீயையும் பயத்தை யுண்டுபண்ணக் கூடிய பெயருள்ள ஸ்திரீயையும் விலக்கவேண்டியது.

10. சரீரத்தில் அங்கஹீன மில்லாதவளாயும் ரம்மியமான பெயருள்ளவளாயும் அன்ன நடையுள்ளவளாயும், சரீரத்திலும் சிரசிலும் மத்திமமான மயிருள்ளவளாயும், சிறுபற்களுள்ளவளாயும் இருக்கின்ற ஸ்திரீயை ஒருவன் விவாஹம் செய்துகொள்ள வேண்டும்.

11. சகோதரனில்லாத ஸ்திரீயையாவது, பிதா தெரியாத ஸ்திரீயையாவது அறிவுள்ளவன் விவாகம் செய்து கொள்ளமாட்டான். ஏனென்றால் முன்னதில் ஸ்திரீயானவள புத்திரிகா புத்திரனை யுண்டுபண்ண வேண்டியவளாக ஏற்படுவாள். பின்னதில் பாவம் சம்பவிக்கும்.

இப்போது நாம் கவனிக்க வேண்டியது இதுவாம்:- முன் சொல்லப்பட்டிருக்கிற அநேக தோஷஙகளில் ருதுவாயிக்கின்ருள என்ற தோஷத்தைச்சொல்ல வில்லே. மேலும் 9-வது அத்தியாயம் 88-முதல 94 வரை சுலோகஙகள முக்கியமானவைகள :—

88-வது சுலோகம் :—ஒரு ஸ்திரீயானவள அப்பி ராப்தியாக இருந்தாலும, நலலகுணமுளள அழகான வும சமான ஜாதியாகவுமுளள மாப்பிளளே கிடைக்கு மாகில் தன்னுடைய பெண்ணே விவாகத்திற்காகக் கன் னிகாதானம் செயய வேண்டியது.

89. குணசீலமில்லாத ஒருவனுக்கு ஒருவன், ருது வாயிருக்கின்ற தன் பெண்ணே விவாகம் செயது கொ டுப்பதைக்காட்டிலும் தன் பிதா கிருஹத்திலேயே மரண பரியநதம் வாழ்வது நலம்.

90. ருதுவான மேல ஸ்திரீயானவள மூன்று வரு ஷம் காத்திருகக வேண்டியது. அதன் பிறகு தனக் குச் சமான ஜாதியுளள ஒரு புருஷனேயடைய வேண் டியது.

91. தன் சம்ரக்ஷணேகர்த்தர் தன்னேத் தானமசெய் யாமற் போனுல தானுகவே ஒரு புருஷனேத் தேடிக் கொளளலாம். அதனுல் தனக்காவது தன்னே விவா கம் செய்து கொள்ளும் புருஷனுக்காவது பாபம் சம் பவியாது.

92. அப்படி தன் புருஷனேத் தானே தேடிக்கொ ளளுகின்றவள, தன் பிதாவாலும் மாதாவாலும் சகோ தரனுலும் கொடுக்கப்பெற்ற நகைகளே எடுத்துக்கொ

ண்டுபோகக் கூடாது. அப்படிச் செய்தால் அவள் திருடினவளாவள்.

93. ருதுவானபின் ஒரு ஸ்திரீயை ஒருவன் மணம் புரிந்தால் அவன் அவளுடைய பிதாவுக்குச் சுல்கா அல்லது சோபனதிரவியம் கொடுக்க வேண்டுவதில்லை. ஏனெனில் அவளுடைய ருதுவைப் பயனில்லாமல் செய்து போட்டதினுல் அவள் பேரிலிருந்த சுதந்தி ரத்தை அவன் இழந்து விடுகிருன்.

94. 30-வயதுள்ளவன், தன்மனத்துக்கு ரம்மியமான 12-வயதுள்ள கன்னிகையைக் கல்யாணம் செய்து கொள்ளவேண்டும்; கிரியை தவருமல் இருக்கவேண்டு மென்று ஒருவன் அவசரப்படுவாளுகில், 8-வயதுள்ள கன்னிகையை 24-வயதுள்ளவன் விவாகம் செய்து கொள்ளலாம்.

இப்போது நான் சொல்லுகிற அபிப்பிராயமாவது 94-ம் சுலோகமானது புருஷனுடைய சவுகரியத்தைப பற்றியதா யிருக்கிறது. அதனுல் முன் 3-வது அத் தியாயத்திலிருந்து நாம் எடுத்து மொழி பெயர்த்திருக் கின்ற சுலோகஙகளில் சேர்ந்திருக்க வேண்டும். இந்த அத்தியாயத்தில் பிதா அல்லது சமரக்ஷனே கர்த்தா வின் அபிப்பிராயத்தை யனுசரித்து வசனங்கள் ஏற் பட்டுள்ளன. **மேதாதிதி** என்பாரும் **ராகவானந்தரும்** இந்தச் சுலோகம் அசந்தர்ப்பமான இடத்தில் எழு தப் பட்டிருக்கிறதாகச் சொல்லி யிருக்கிருர்கள். **ராகவானந்தர் ( ஸ்தான )** இடம் மாறியிருக்கிறதாக அபிப்பிராயப் படுகிருர். ஆனுல் இதை இவ்வி

டத்தில்தான் கன்னிகையின் வயதைப்பற்றி மனு விசாரிக்கிறார். கன்னிகையானவள் ருதுவாகி 3-வருஷத்துக்குமேல பிதாவானவன் தன் குமாரியைத் தானம் செய்யக்கூடாது. ஆனால் அக்காலத்துக்குப் பிற்பாடு ஒருவன் அவளை விவாகம் செய்து கொளவதற்கு யாதொரு தடையுமில்லை. இந்தச் சுலோகத்தின் கடைசி வாசகமான "धर्मे (सीदति सत्वर : )' அர்த்தத்தைப் பற்றி ஒரு விஷயம கவனிக்கத் தகுந்து. வியாக்கியாதாக்களில ஒருவரான ராமசந்திரா, என்பவரின் அபிப்பிராயப்படி இதின் அர்த்தம இதுவாம்:- அவள பக்குவகாலம் சமீபித்தால அவன் (விவாகத்தை) துரிதப்படுத்த வேண்டும இந்தப்பிரகரணமானது மாப்பிள்ளையை நோக்கியதாயிருக்கிறதினால் இந்தச்சாவதானமான வார்த்தையானது பொருந்தாது. வேறு ஒரு வியாக்கியாதாவும இந்த அபிப்பிராயம் கொளளவில்லை. வேறொருவர் " सीदति " என்ற வார்த்தையை முற்று வினையாக எடுத்துக் கொண்டு, "அவசரப்படுகிறவன் தர்மத்தில் பிசகுவான்." என்று அர்த்தம் செய்திருக்கிறார். வித்வான் **மண்டலீக்** என்பார் பிரசித்தம்செய்திருக்கிற (6) வியாக்கியானங்களில் ஒன்றேனும் இதை யாதரிக்கவில்லை. ஆனால் அவ்வியாக்கியானங்களெல்லாம் இந்த வார்த்தையை ( धर्मे सीदति locative absolute என்று) வைத்துக்கொண்டு அர்த்தம் செய்திருக்கின்றன. அப்போது இந்த வசனமானது தனிப்பட்ட வாக்கியமா அல்லது (त्वरवर्ष:) என்றதற்கு விசேஷணமா?

மூந்தியதானுல் இவ்விதமான அர்த்தம் ஏற்படும். தர்மத்துக்கு லோபம் வரும் பக்ஷத்தில விவாகத்தைத் துரிதப்படுத்தலாம். 8 வயதுக்குக் கீழ்ப்பட்ட கன்னிகைக்குக்கூட விவாகம் செய்விக்கலாம். விசேஷணமாகவே அர்த்தம் செய்வது உசிதமென்று தோன்றுகிறது. அல்லது சிலசமயங்களில் 8 வயதில் கன்னிகைகளுக்கு விவாகம்செய்யலாம் என்றதற்குக் காரணம்சொல்வதாக ஏற்படும். 12வயதில் சாதாரணமாய் விவாகம் செய்யவேண்டிய காலம். அது ருதுவாகும் வயது [45]. அதன்பிறகு சம்ரக்ஷணை கர்த்தன் கன்னிகாதானம் செய்துகொடுக்க மூன்று வருஷ காலம் ஏற்பட்டிருக்கிறது. 15 அல்லது 16 வருஷத்துக்கு மேலே ஸ்திரீக்கு விவாகம் செய்யக்கூடாதென்றிருந்தால் எந்த வயதுக்குக் கீழே விவாகம் செய்யக் கூடாது? அதற்கு உத்தரமாக 8 வயது என்று சொல்லப்படுகிறது. ஆனல் அவ்வளவு வாலிபத்தில் கல்யாணம் செய்வதற்கு அவசியமும் காரணமும் இருக்கவேண்டும். அது என்னவென்றால புருஷன் சம்பந்தமாக ஏதாவது தர்மகாரியத்துக்கு ஹானி நேரிடக்கூடியதாயிருந்தாலும் பிதா விஷயத்தில நல்ல மாப்பிள்ளை கிடைப்பதாயிருநதாலும் அவ்விதம் செய்யலாம். ஆகையால் 88-வது சுலோகத்தில் “ **अप्राप्ताम्** ” என்ற பதத்திற்கு விவாகத்திற்கு அருகமான 12-வது வயது முடியாது என்று அர்த்தம்

---

45. **ऋतुदर्शनं च द्वादशवर्षाणामिति स्मर्यते ।**

கொள்ளவேண்டும். மேதாதிதியானவர் இந்த வயது கிரமசம்பந்தப்படுத்தாமலே விசேஷமாய்ப் பொதுப் படையாகப் பேசுகிறார். இதில் அவர் வியாக்கியானமாவது :—46 "கௌமாரப்பருவம் கூட வராதவளும் காம நினைப்பே யேற்படாத இளம்பிராயமுள்ளவளும்" என்பதுதான். 89-வது சுலோகத்தின்மேல் அவர் வியாக்கியானத்தில் இன்னும் சவிஸ்தாரமாயும் தெளிவாயும் சொல்லுகிறார். 47 பெண்ணை ருதுவாகுமுன் விவாகம் செய்துகொடுக்கவே கூடாதென்றும், ருதுவானாலும் சரியான மாப்பிள்ளை கிடைக்கும் வரையிலும் கன்னிகாதானம் செய்யக்கூடாது என்றும்." ஆனால் ருதுகாலம் 12 வயதாக நினைக்கப்படுவதால். "(अप्राप्ताम्)" என்ற பதத்திற்கு "மேற்படி 12 வயது ஆகாத" அல்லது "இன்னம் ருதுவாகாத" என்று இரண்டிலொரு அர்த்தம் செய்வதினால் யாதொரு வித்தியாசமுமில்லை. அது விஷயத்தில் நன்றாய்ப் பரிசீலனை செய்யாத சில வியாக்கியாதாக்களின் அர்த்தங்களை எடுத்துக் காட்டுவோம். சரியான விவாகவயது 8-வது தான் என்று சொல்லியிருக்கிற "தக்ஷர்" என்பவரை 48 அனுசரித்தே மனுவும் சொல்வதாயக் கொள்ள

46. अप्राप्तं कौमारं वयः। कामवशत्वेनबालाम् ।

47. प्रागृतोः कन्याया न दानम् । ऋतावपि यावद्गुणवान्वरो न लभ्यते ।

48. विवाहयेदष्टवर्षामेवं धर्मोनहीयते ।

வேண்டுமென்று **குல்லூகபட்டர்** என்பவர் வற்புறுத்தியிருக்கிறார். தவிரவும் விவாஹ சம்பந்தமான இந்தச் சுலோகத்தில் 8-வயதுக்குக் கீழ்ப்பட்டும் மணம் ஒப்புக்கொள்வதாயும் சொல்லுகிறார். **நந்தனர்** [49] என்பவர் முற்றிலும் இந்த அர்த்தம் விட்டு விலகி "வயதிலும்" (ஆக்ருதி) முதலியதிலும் "புருஷனுக்கு நேர்மையில்லாத" என்று இதற்கு அர்த்தம் செய்கிறார். மற்றவர்கள் "(**अष्टवर्षां**)" என்று ஆரம்பிக்கிற **பராசரருடைய** பிரசித்தமான சுலோகத்தை எடுத்துக்காட்டி "(அப்ராப்தாம்)" என்பதற்கு 'எட்டு வயதாகாத' என்ற மனுவுடைய அபிப்பிராயம் பட்டதுபோலச் சொல்லுகிறார்கள். **யாக்ஞவல்கியருடைய** வசனம் ஒன்று ருதுவாகுமுன் விவாகம் செய்ய வேண்டுமென்று விதிக்கிறது. **அபரார்க்கர்** என்பவர் அதற்கு வியாக்கியாதா. மனுஸ்மிருதி 9-வது அத்தியாயம். 89-வது சுலோகத்திற்குச் சமாதானம் சொல்லவேண்டுமென்று இந்த வியாக்கியாதா நினைத்து அடியில் வருமாறு சொல்கிறார். [50] அந்தச் சுலோகத்தின் அர்த்தம் "நல்ல மாப்பிள்ளை கிடைக்கும் பக்ஷத்தில் கெட்ட மாப்பிள்ளையைக் கிரகிக்கப்படாது. ருதுவானபின் விவாகம் செய்தலை அந்தச் சுலோகம் ஆதரிப்பதாக எண்ணக் கூடாது." இவ்

---

49. वयोरूपादिभिरसदृशामपि ।

50. तद्गुणवद्वरसंभवे गुणहीनाय नदातव्येत्येवंपरम् । न तु कन्यर्तुदर्शनमदोष इत्येवमर्थम् ।

விதமாக **யாக்ஞவல்கியருடைய** அபிப்பிராயத்தை இவர் ஆதரித்திருக்கிறார். மனு என்பவர் இதனடுத்த சுலோகத்தில் ருதுவாகி 3 வருஷத்திற்குள் பிதாவானவன் தன் குமாரத்தியை விவாகம் செய்து கொடுக்கலாமென்று சொல்லியிருப்பதற்கு இவர் என்ன சொல்லுவாரோ? 94-வது சுலோகத்தில் தம்பதிகளின் வயது விஷயத்தைப்பற்றி மனு ஏற்படுத்தியிருக்கிற விதிகளுக்குச் சில யுக்திகள் கற்பிக்கின்றார்கள். அந்த வயது மாத்திரந்தானு விவாகத்திற்குச் சரியானது? அல்ல என்று **மேதாதிதியும் குள்ளுகபட்டரும்** சொல்லுகிறார்கள். மனுவினுடைய வயதைப்பற்றிய விதிகள் தம்பதிகளுக்குள் ஒருவருக்கொருவர் இருக்கவேண்டிய வயதென்று இவர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். அதாவது 12-க்கு 30-ம் 8-க்கு 24-ம் 1-க்கு 3 ஆகிறது மற்ற வயதுக் கிரமங்களிலும் இந்தத் தாரதம்மியத்தையே அனுசரிக்க வேண்டியது [51]. இவ்விதமாய்ப் பிரஸ்தாபித்ததான தாறுமாறான விவாதமிருந்த போதிலும் 88 முதல் 94 வரை சுலோகங்களைத் திரும்பவும் வாசித்தால் அடியில் கண்ட சித்தாந்தங்கள் ஏற்படும்.

1. சாதாரணமாய விவாகத்திற்கு ஸ்திரீக்கு 12 வயது அல்லது பக்குவ சமயம்.

---

51. वर्षै रेकगुणां भार्या मुद्वहेत्रिगुणः स्वयम् । விஷ்ணுபுராணம்
त्रिंशद्वर्षो दशाब्दां तु भार्यां विन्देत नग्निकाम् ।
एकविंशतिवर्षो वा सप्तवर्षामवाप्नुयात् ॥ பிருகஸ்பதி.

2. மேல்கண்ட வயதுக்கு முன்னும் 8-வயதுக்குக் கீழாக எப்போதும் விவாஹம் கூடாது. ஆனால் ஏதாவது விசேஷங்களால் நிர்ப்பந்திக்கப்பட்டால் செய்யலாம்.

3. மேற்கண்ட வயதுக்கு மேல ருதுவாகி 3-வருஷத்துக்குள் விவாகம் செய்யலாம்.

4. மேற்படி மூன்று வருஷம கிரமித்ததின் மேல் கன்னிகையானவள் புருஷனைத் தானே சம்பாதித்துக் கொள்ளலாம. இந்த விஷயத்தில் பிதாவால் கொடுக்கப்பட்ட நகைகளை அவள் கொண்டு போகக்கூடாது. பிதாவும் சுல்கா அல்லது சோபனத்திரவியத்துக்குப் பாத்தியஸ்தனல்லன்.

5. இப்படிச் செய்வதால புருஷனாவது ஸ்திரீயாவது பாவத்துக்குள்ளாகார்கள. தன் குமாரியை விவாகம் செய்து கொடுக்காமல உபேக்ஷையாயிருக்கிற பிதா விஷயத்தில் என்ன சொல்லப்படுகிறதென்பதை விசாரிப்போம். 9-வது அத்தியாயம் 4-வது சுலோகத்தில மனு சொல்லுகிறதாவது 52. "சரியான காலத்தில் தன் பெண்ணை பிதா விவாகம் செய்து கொடுக்கத் தவறினால் அவன் நிந்தனைக்குள்ளாவான்." ஆனால் சரியானவயதென்பது எது? இதைபபற்றியது முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது 53 கர்ப்

52. काले ऽदातापिता वाच्योवाच्यश्चानुपयन्पतिः। मृते भर्तरि पुत्रस्तु वाच्यो मातु रक्षिता॥

53 மேதாதிதிபேரை வைத்து இந்தச் சுலோகத்திற்கு ஓர் ஆபத்துக்கிடமான வியாக்கியான மிருக்கிறது.

பத்தை அழித்தலினாலுண்டாகும் பாவப்பிராந்தி மனுவைப் பிடிக்கவில்லை என்பதை நாம் பார்க்கலாம். இந்த விஷயமானது பின்னவர்களுடைய விபரீத யுக்தியாம். **போதாயனர், வஸிஷ்டா** இவர்களுடைய சூத்திரங்களில் சில பிடிவாதக்காரர்களால் நுழைக்கப்பட்டிருக்கிறது 93-வது சுலோகார்த்தத்தைக் கூட அதிக யுக்தியால் இந்த அபிப்பிராயத்திற்கு இணங்கும்படி செய்வார்கள். பக்குவமான ஸ்திரீயை ஒருவன் முந்திய சுலோகங்களின்பேரில் அவர் செய்திருக்கிற தாத்பரியத்திற்கு இது முற்றும் விரோதமா யிருக்கிறது. "கன்னிகைக்கு விவாககாலம் 8 வயது முதல் ருதுவாகும் வரை. (कः पुनः कन्यादानकालः । अष्टमाद्वर्षात्प्रभृति प्रागृतोरितिस्मर्यते) இந்தக் குறிப்பானது அவருடைய வியாக்கியானத்தின் பொதுவான சாரத்துக்கு விரோதமாக இருக்கின்றமையால் இஃது அவருடையது என்பதில் சந்தேகம் ஜனிக்கிறது. **மேதாதிதியினுடைய** வியாக்கியான ஏட்டுப்பிரதிகள் ஒழுங்கில்லாமலும் அரை குறையாகவும் இருக்கின்றன வென்று வித்துவான் **மண்டலீக்** சொல்லுகின்றதாலும் **பட்டாசாரியார்** என்பவர் தம்முடைய இந்து தர்மசாஸ்திர பாஷ்யம் என்ற நூலில் சொல்லியிருக்கும் அபிப்பிராயத்தினாலும் நாம் கொண்ட சந்தேகமானது உறுதிப்படுகிறது. இந்தச் சுலோகத்தின் வியாக்கியானத்தில் இரண்டு இடங்களில் ஒன்றில் 8. மற்றொன்றில் 18 அக்ஷரங்களுக்கு இடம் விட்டு எழுதியிருக்கிறது. இந்தக்குறிப்பானது மேதாதிதியினுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ள முடியாத அல்லது அவர் அபிப்பிராயத்தின் பொருத்தத்தில் சிரத்தை யில்லாதவருடையதாக இருக்க வேண்டுமென்று நிச்சயிக்கக் கூடியதாயிருக்கிறது.

விவாகம் செய்துகொண்டால் அந்த **ஸ்திரீயின்** பிதா வுக்குச் **சுல்கம்** கொடுக்கவேண்டியதில்லை. ஏனென்றால் அவளுடைய **ருதுக்களை** வியர்த்தமாக்கி விட்டதினால் அவளைத் தானம் செய்து கொடுக்கும் சுதந் திரத்தை இழந்து விடுகிறான். (ऋतुमती) என்ற வார்த்தை உபயோகித்திருந்தாலும் அந்த இடத் தில் மூன்று வருஷம் காத்திருந்து புருஷனைத் தானே தேடிக்கொண்டு பசுவமான **ஸதிரீ** யென்று அர்த்தமாகிறது. அந்த விதமான **ஸ்திரீ** சம் பந்தமாகத்தான் பிதா சுதந்தரத்தை இழக்கிறான். மேலும் ரிஷியானவர் இந்த சுலோகத்தில் (हरन्) என்ற வார்த்தையை உபயோகிக்கிறார். அதின் அர்த் தம் "சொடுக்காமல் கிரகித்தல்." மேலும் மனுவின் அபிப்பிராயமானது இவ்வித அபவாதத்துக்குட்டா மலிருக்க வேண்டுமென்றே நினைப்பவராய **மேதாதிதி** இந்த சுலோகம் மனுவின் சுலோகமன்று என்பது கான பாரம்பரியான அபிப்பிராயம் என்று சொல்லி யிருக்கிறார்.[54] உண்மை என்னவென்றால் மனுவின் காலத்தில் ருதுவுக்கு முன்னும் ருதுவான பின்பும் விவாகம் வழக்கத்திலிருந்ததென்று தோன்றுகிறது. அவர் இரண்டையும் அங்கீகாரம் செய்து இன்னின்ன வரம்புக்குட்பட்டு நடக்கவேண்டுமென்று விதிக்க முயன்றார். அவர் காலத்தில் 8-வது அத்தியாயம் 224 முதல் 226-வது சுலோகங்களில் கண்டபடி

---

54. कोचिदाहुरमानवो ऽयश्लोकः ।

விவாகத்திற்கு முன் புருஷ சங்கமம் செய்து விட்ட படியால விவாக ஸம்ஸ்காரத்திற்கு அநர்ஹைகளாக இருந்த ஸ்திரீகள இருந்திருக்கிறார்கள என்று தெரிய வருகிறது.

"குற்றமுள்ள ஸ்திரீயை அவ்விஷயத்தைத் தெரிவிக்காமல் எவன் விவாகம் செய்து கொடுக்கிறானோ அவனுக்கு இராஜா 96 பணம் அபராதம் விதிக்க வேண்டும்.

கன்னிகையாயிருப்பவளை வேண்டுமென்று அக்கிரமமாய்க் கன்னிகையல்லவென்று சொல்லியும் அதை ரூபிக்கமுடியாமலும் இருந்தால அவனுக்கு இராஜா 100 பணம் அபராதம் விதிக்கவேண்டும்.

பாணிக்கிரகணத்தைப் பற்றிச் செய்ய ஏற்பட்ட மந்திரங்கள கன்னிகைகளுக்கு ஏற்பட்டதே யல்லாமல் மற்றவர்களுக்கு அல்ல. மற்றவர்கள இந்தப் பரிசுத்தமான கிரியைகளுக்கு அநர்ஹர்களாவார்கள்.

ஒரு ஸ்திரீயின் குற்றங்களாவது க்ஷயம் முதலிய கொடிய வியாதியும், சங்கம தோஷமும் என்று மேதாதிதி வியாக்கியானம் செய்திருக்கிறார். கன்னிகைகளின் குற்றங்களில் ஒன்று சங்கமதோஷமென்று நாரதரும் சொல்லியிருக்கிறார் [55]. 225-வது சுலோகத்தில் குறித்திருக்கிற அபவாதமிதுதான். ருதுவாகாத ஸ்திரீயின்மேல இந்த அபவாதத்தைச் சொல்ல இட

---

55. दीर्घकुत्सितरोगार्ता व्यङ्गा संसृष्टमैथुना ।
दुष्टा ऽन्यगतभावा च कन्यादोषाः प्रकीर्तिताः । நாரதர்.

முண்டா ? 8-வது அத்தியாயத்திலிருந்து எடுக்கப் பட்டுள்ள அடியிற்கண்ட சுலோகங்கள் இந்த சந்தே கத்தைப் பூர்த்தியாக விலக்குகின்றன.

364 ஒரு கன்னிகையுடன் துராகிருதமாயப் புண ர்ச்சிசெய்கிறவனைக் கொலைதண்டனைக்கு உடனே உட் படுத்தவேண்டும். அவள் சம்மதத்தின்மேல சமஜாதி யான் சங்கமம செய்தால அவன் கொலை தண்டனைக் குளளாகமாட்டான்.

365. மேலான ஜாதிககாரனுடன் ஒரு கன்னிகை யானவள் சேர்ந்தால அவள் தண்டனைக்கு உளளா காள். கீழான ஜாதிக்காரனுடன் சேர்ந்தால் அவளை வீட்டில் அடைத்துப் போட வேண்டும்.

366 மேலான ஜாதிககன்னிகையை கீழான ஜாதி யான் நோக்கினால அவன் மரணதண்டனைக்குளளா வான். அவர்கள சமஜாதியாக இருக்கும் பக்ஷத்தில கன்னிகையின் பிதா சம்மதித்தால் சுல்காவை அவரி டம் கொடுத்துக் கன்னிகையை அவன் விவாகம் செய்து கொளளலாம்.

364-வது சுலோகத்தில (सकामा) என்ற வார்த்தை உபயோகித்திருக்கிறது. அதின் அர்த்தம் 'காமமுளள' என்பது கன்னிகையே புருஷனை மயக்குகிறாள். இந்த விஷயங்களெல்லாம் ருதுவாகாத கன்னிகை சம்பந்தமாக இருக்கக்கூடுமா ? இந்தச் சுலோகங் களில் எல்லாம் கன்னிகை என்ற வார்த்தையானது உபயோகிக்கப் பட்டிருக்கிறது.

**விஷ்ணு** :— இந்த ஸ்மிருதி 24-வது அத்தியாயத்தில் அடியில் வருமாறு சொல்லுகிறது. "ஒரு கன்னிகையானவள் 3 ருது காலம் காத்திருந்ததின்மேல் ஒரு புருஷனைத் தானே தேடிக்கொள்ளலாம். 3 ருது ஏற்பட்ட பிற்பாடு சுவதந்தரமுள்ளவளாய் ஆகிறாள். கலியாணமில்லாமல் கன்னிகை பிதாவினுடைய கிருகத்தில் ருதுவானால் சூத்திர ஸ்திரீக்கு ஒப்பாக நினைக்கப்படுவாள். ஆனால் அவளை விவாகம் பண்ணிக்கொள்ளுகிறவன் தோஷத்திற்குட்படான்." இந்த இடத்தில் 3-வது ருதுவுக்கு முன் பிதாவானவன் தன்னுடைய கன்னிகையை விவாகம் செய்து கொடுக்க அதிகார முண்டு. இப்படி ருதுவான ஸ்திரீயை விவாகம் செய்து கொடுப்பதற்காக யாதொரு பழிப்பும் ஏற்படவில்லை. ஆனால் கன்னிகையை மாத்திரம் ஒரு சூத்ராணவளாக பாவித்தால், அந்தோ! என்ன கொடுமை. அவளை விவாகம் செய்து கொள்ளுகிற புருஷனுக்கோ யாதொரு பழிப்புமில்லை. இந்த அபிப்பிராயம் முன்னுக்குப்பின் விருத்தமாயிருக்கிறது. இதற்குக்காரணம் இந்தக் கிரந்த கர்த்தா இது விஷயத்தைப்பற்றி இரண்டு அபிப்பிராயத்தோடு எழுதியிருப்பதாகத் தெரியவருகிறது. அக்காலத்தில் ருதுவாகியும் விவாகமில்லாமல் கன்னிகை கிருகத்திலிருந்தால் பொதுவாக ஜனங்கள் அபிப்பிராயத்தில் அபவாதத்திற்கு இடமுள்ளதென்று ஏற்பட்டது. உடனே விவாகமாகி விட்டால் அந்த அபவாதம் நீங்கிவிடுகிறது. நம்முடைய காலமானது மனுவி

னுடைய காலத்திற்கு வெகு தூரத்திலுள்ளது. விஷ்ணு ஸ்மிருதியில் தான் முதல் முதலை ருது வான கன்னிகைக்கு இழிவைக் கற்பிக்கிறது. முன் னிருந்த மூன்று வருஷங்களை மூன்று ருதுக்களாகக் குறைத்து விட்டார். ஒரு வியாக்கியாதா ருதுவென் ருல வருஷ மென்று அர்த்தம் செய்கிருர். விஷ்ணு வானவர் இந்த விவாக விஷயத்தைப் பற்றிக் கடின மான விதிகளை யேற்படுத்தி யிருக்கிருர். கௌதமரு டைய பூர்வீக விதியைத் திருமபவும் அநுஷ்டானத் துக்குக் கொண்டுவரப் பிரியமுள்ளவரா யிருக்கிருர். ஆனல் ஒன்று இங்கு அறியத்தக்கது. ருதுவானபின் மூன்று ருதுக்களுக்குள் கன்னிகைகளுக்கு விவாகம் செய்யலாம்

நாரதர் — 3-வருஷம் அல்லது 3 ருது என்று பிரஸ் தாபித்த பயவிஷயமாய் ஏற்பட்ட எல்லை நீங்கி விட்டது. ஆனல் ருதுவாவதற்குமுன் விவாகம் செய்வதில் நாரதருக்குச் சம்மதமில்லை. ருதுவானவு டன் விவாகம் செய்யவேண்டு மென்பது அவருடைய தீர்மானம்.

“ கன்னிகையானவள் தான ருதுவான விஷயத்தைப் பற்றி அலக்ஷியமா யிருக்கக்கூடாது.” தனபந்துக்களி டம் தெரியப்படுத்த வேண்டும். அவர்கள் ஒரு புருஷ னுக்கு விவாகம் செய்து கொடுக்காமல் போனல் ஒரு கருவழித்தற்கு உள்ளாவார்கள். அவளை விவாகம் செய்து கொடுக்காத வரையில் எத்தனை ருதுக்கள் ஏற்படுகின்றனவோ அத்தனை கர்ப்பங்களை அழித்த

பாபம் அவர்களைப் பிடிக்கும். ஆகையால் ருதுவா னவுடனே பிதாவானவன் தன் கன்னிகையை விவா கம் செய்து கொடுக்க வேண்டும். அன்றேல் பெரி யபாபம் அவனுக்கு நேரிடும். இதுதான் நீதிமான் களுடைய விதி. "இதில் ஒன்றைக் கவனிக்கலாம்." அம்ஹிதாவது 3 வருஷ சம்பந்தமான விதியானது அநுஷ்டான மில்லாமல் போனவுடனே தேடிக் கொள்ளும் சுயம்வரமானது அநுஷ்டான மில்லா மல் போய் விட்டது. ஆயினும் ருதுவாகிக் கலியாண மில்லாத கன்னிகைகள் இருக்காமல் நிற்கவில்லை. இருந்தார்கள். அடியில்கண்ட விதிகள் கவனிக்கத் தக்கன. "ஒரு கன்னிகையின் இஷ்டமில்லாமல் பல வந்தமாக ஒருவன் அவளுடன் சேருவானாகில் அவ னுடைய கைவிரல்களில் இரண்டை வெட்டிவிட வேண்டும். அவள் மேலான வருணத்தவளாயிருந் தால் அவன் மரணதண்டனைக்குள்ளாவான். அவன் சொத்துக்கள் யாவும் பறிமுதல் செய்யப்படும். கன் னிகையே விரும்பி அப்படி நேர்ந்தால் அவளுடன் புணர்ச்சியால் குற்றம் ஏற்படவில்லை. ஆனால் அவன் நகைகள் கொடுத்து அவளைப் பிரியத்துடன் பாராட்டி அவளை விவாகம் செய்து கொள்ள வேண் டும்.

**யாக்ஞவல்கியர்** :— இவர் ஸ்மிருதியின் 1-வது அத் தியாயத்தில் 64 வது சுலோகத்தில் அடியில் வரு மாறு சொல்லியிருக்கிறது. "கன்னிகையை விவா கம் செய்து கொடுக்காத பிதா அல்லது சம்ரக்ஷகர்த்

தர் ஒவ்வொரு ருது காலத்திலும் கர்ப்பத்தை யழித்த தோஷத்துக்கு உள்ளாவார். பிதா அல்லது சம்ரக்ஷணை கர்த்தரில்லாமல் போனால் கன்னிகையானவள் சுயமாகத் தகுந்த புருஷனை வரித்துக் கொள்ளலாம். யாக்ஞ்யவல்கியர் நாரதருக்கு முந்தியவர். ஆனால் நாரதரை விட அவருடைய விதியானது மிகவும் கண்டிப்பாயிருக்கிறது. சுயம்வரத்தையும் அவர் விதித்திருக்கிறார். அந்தச் சுயம்வரமாவது என்னவென்றால் இவருடைய வியாக்கியாதா அபரார்க்கர் சரியான வியாக்கியானம் செய்ததாக வைத்துக்கொண்டால் ருதுவாகு முன் கன்னிகை சுவயம் வரத்தை நடத்தவேண்டியது. இது, பிதா, சம்ரக்ஷணை கர்த்தர்கள இல்லாதபோனால் நேரிடக்கூடியது. அப்படியிருந்தும் அவளுடைய க்ஷேமத்தைப்பற்றிக் கவனியாமலிருந்து விட்டால் ருதுவான பின் உடனே ஒரு புருஷனை அவள வரித்துக்கொள்ள வேண்டியது 56.

இந்த ரிஷியின் வியாக்கியாதா தம்முடைய கடுமையான விருதக்கொள்கைகளை வைத்துக்கொண்டு வியாக்கியானம் செய்திருக்கிறதாகத் தோன்றுகிறது. இந்தப்பிரகரணத்தில் அவர் நிரம்ப சங்கிரகமாயிருக்கிறார். அதுவே அவருடைய கடின சித்தத்தைக் காட்டுகிறது. ஷை சுலோகத்தின் 1-வது பாகத்தை விபரீத மில்லாமல் சரியானபடி அர்த்தம் செய்தால்

---

56. एतच्च प्राग्रजोदर्शनात् । दृष्टे तु तस्मिन्पित्रादिषु सत्स्वपि स्वयमेव कन्या वरं कुर्यात् ।

ருதுவானமேல சீக்கிரத்தில் விவாகம் செய்யவேண்டு மென்பதை விதிப்பதாக ஏற்படும். **நாரதர்** இதே அபிப்பிராயமாயிருக்கிறார். ஆனால் ருதுவான பிற்பாடுதான் விவாகம் செய்யவேண்டு மென்று வற்புறுத்துகிறார் சுயம்வர விஷயத்தில் சம்ரக்ஷணைய கர்த்தர் இல்லாத கன்னிகைகளைப் பற்றிக்கூட ருதுவான மேல்தான் கன்னிகையானவள் சுயமாக வரனைத் தேடலாமென்று யாக்ஞயவல்கியர் அபிப்பிராயம் இருந்திருக்கலாமென்று நம்பக்கூடியதாயிருக்கிறது. இது வரையில் ருதுவாவதற்கு முன் விவாகம் நடத்தல் நலம் என்று சில ஸ்மிருதிகளும், நடத்தத்தான் வேண்டுமென்று சில ஸ்மிருதிகளும், இருந்தபோதி லும் இவைகளெல்லாம் சில நிபந்தனைகளுக்குட்பட்டு ருதுவான மேலும் விவாகம் செய்யலாமென்று இடங் கொடுத்திருக்கின்றன. இனி நாம் எடுத்துக்காட்டப் போகிற ஸ்மிருதிகள் ருதுவானமேல் விவாகமே செய் யக்கூடாதென்றும் அப்படிச் செய்ததினால் ஏற்படும் தோஷத்தை மேன்மேலும் அதிகப்படுத்தியும் எல் லாரையும் பீடித்தும் வற்புறுத்திக்கூறுகின்றன.

**வேதவியாஸர்** :—2-வது அத்தியாயம் 7-வது சுலோகம். சம்ரக்ஷணை கர்த்தாவினுடைய அசட்டையால் கன்னிகையானவள் விவாஹத்திற்கு முன் ருதுவானால் ஒவ்வொரு ருது காலத்திலும் கர்ப்பத்தை அழித்த தோஷத்துக்கு அவன் உள்ளாவான். பதிதனுகவும் ஆகிறான்.

**சங்கரர்** :—15-வது அத்தியாயம் : விவாகமில்லாமல் கன்னிகை ருதுவாகிப் பின்பு இறந்தால் அதினுல் எற்படும் ஆசௌசம் ஒருகாலும் விலகமாட்டாது.

**சாதாதபர்** :—65-வது சுலோகம் : விவாகமில்லாமல் பிதாவின் கிருகத்தில் கன்னிகை ருதுவானுல் பிதா கர்ப்பத்தை யழித்ததோஷத்திற்குள்ளாவான். அவள் சூத்திர ஸ்திரீயாக ஆவாள்.

**லெகு ஆஸ்வலாயனர்** : 21-வது பிரகரணம், 5-வது சுலோகம் :—ருதுவாகியும் ஒரு கன்னிகை விவாகமில்லாதிருந்தால் அவள் சூத்திரஸ்திரீயே. அவள் புத்திரனும் சூத்திரனுவான்.

**பிரஜாபதி** : 85-வது சுலோகம் :—பிதாவின் கிருகத்தில் விவாகமில்லாமல் ஒரு கன்னிகை ருதுவானுல் அவள் சூத்திர ஸ்திரீயே.

**ஆங்கிரஸர்** : 126—128-வது சுலோகங்கள் :—பிதா கிருகத்தில் ஒரு கன்னிகை ருதுவானுல் அவள் சூத்திர ஸ்திரீயாவாள். பிதாவும் கருவையழித்த பாபத்திற்குள்ளாவான். மாதா பிதா ஜேஷ்ட சகோதரன் அப்படி ருதுவானவளைப் பார்த்தால் நரகத்துக்குப் போவார்கள். துணிந்து ஒரு பிராமணன் அவளை விவாகம் செய்துகொண்டால் அவன் சூத்திர ஸ்திரீயின் புருஷனே. அவனுடன் புஜிப்பும் சல்லாபமும் கூடாது.

மேல்கண்ட ஸ்மிருதிகளில் முதல் 2 கன்னிகைக்குத் தோஷம் ஆரோபிக்கவில்லை. 3-வது, அவளைச்

சூத்திர ஸ்திரீயாக இகழ்கிறது. 4-வது அவளையும் அவள் சந்ததியையும் சேர்த்து நிந்திக்கிறது. 5-வது அந்த நிந்தனையில் அவள் புருஷனையும் சேர்க்கிறது. 6 வதில் பரம நிந்தனையும் முடிவாய்க் கூறப்பட்டது.

இன்னும் பாக்கியாயிருக்கிற ஸ்மிருதிகள மூன்று. அவைகள ஒரே விதந்தான். அநேக சுலோகங்கள் பக்கத்திலிருந்து எடுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளின் விதிகளை மொழி பெயர்த்துப் பின்பு கவனிப்போம்.

**யமஸ்மிருதி** :—3-வது அத்தியாயம். சுலோகம் 18 முதல் 22. ஒரு கன்னிகையானவள் விவாகமில்லாமல் பிதா கிருகத்தில ருதுவானல் பிதா கருவழித்த பாபத்துக்குள்ளாகிறன். அவளும் சூத்திர ஸ்திரீயாவாள். (சாதாதபர் சொற்படி) துணிந்து ஒரு பிராமணன் அவளை விவாகம் செய்துகொண்டால் அவன் சூத்திர ஸ்திரீயின் புருஷனுவான். அவனுடன் சாப்பாடும் சல்லாபமும் கூடாது. (இஃது **ஆங்கிரஸ் ஸ்மிருதி** போலும் பின் வரும் பராசரஸ்மிருதியைப்போலும்) கன்னிகையானவள 12 வயதான காலத்தில் பிதா அவளை விவாகம் செய்து கொடுக்காவிட்டால் அவன் ருது ரக்தத்தை மாதாமாதம் சாப்பிட்டவனுவான். (**பராசரர்** இவனுடைய முன்னோர்களும் அதே தோஷத்துக்குள்ளாவார்கள் என்று விதித்திருக்கிறர்) 8-வதுவயதில் அவளுக்குப்பேர் கவுரி. 9-ல் ரோகிணி. 10-ல் கன்னிகை. அதற்குப்பிறகு ரஜஸ்வலை என்று பெயர். கீழே **வரும்பாராசாரும், சம்வர்த்தரும்** இப்படியே

சொல்லுகிறார்கள்.) தாயார், தகப்பன், ஜேஷ்டசகோதரன், ருதுவாகிறதைப் பார்த்தால் நரகத்திற்குள்ளாவார்கள். (இதுமுன் **ஆங்கிரசைப்** போலவும் பின்வரும் **சம்வர்த்தர்களைப்** போலவுமாம்).

**பராசரர்** : 7-வது அத்தியாயம்:—8-வது வயதில் குமாரிக்குப் பெயர் கவுரி 9-ல் ரோகிணி. 10-ல கன்னிகை. பிறகு ரஜஸ்வலை. பிதா தன் கன்னிகையை 12 வயதில விவாகம செய்துகொடுக்காமற் போனல் அவர்களுடைய முன்னேர்கள மாதாமாதம ருதுரத்தத்தைச் சாப்பிட்டவர்களாவார்கள. கன்னிகையின் மாதா, பிதா, ஜேஷ்ட சகோதரன், அவள ருதுவைப் பார்த்தால நரகத்தையடைவார்கள.

அவிவேகததினல ஒரு பிராமணன் அவளை விவாகம் செய்துகொண்டால பந்தி போஜனத்துக்கும் சலலாபத்திறகும தகுதியிலலை. அவன் சூத்திரஸ்திரீயின் புருஷனே.

**சம்வாத்தர்** :—சுலோகம 64 முதல 67. கன்னிகையின் ரகசிய ஸ்தானத்தில ரோமம் உண்டான காலத்தில சோமனும் அவள ருதுவானல கந்தர்வனும், ஸ்தனம் புறப்பட்டால அக்கினியும அவளை அனுபவிக்கிறார்கள. 8-வது வயதில கவுரி. 9-ல் ரோகிணி. 10-ல் கன்னிகை. பிறகு ரஜஸ்வலை. கன்னியின் மாதா பிதா ஜேஷ்ட சகோதரன் அவள ருதுவாகிறதைப்பார்த்தால் நரகத்திற்குப் போவார்கள. ஆகையால் ருதுவாகுமுன் கன்னிகையை விவாகம் செய்து

வைக்கவேண்டும். 8-வயதுள்ள கன்னிகையின் விவாகந்தான் உத்தமம்.

மேற்கண்ட விதிகளைப் பார்ப்பதில் முந்திய விதிகளை விட நமக்கு அதிக லாபமாவது நஷ்டமாவது உண்டாகவில்லை. ஆனால் சாபங்களும் நிந்தைகளும மட்டும் வரவரப் பயங்கரமாயிருக்கிறது. கருவை யழித்தல் என்ற தோஷத்தை அநாகரிகமாயும் ராசாபாசமாயும் உள்ள ருது ரத்தம் என்ற சாதனமூலமாய் வற்புறுத்திச் சொல்லியிருக்கிறது.

**யமர் பராசரர்** இருவரும் தோஷங்களுக்குள்ளாகாமல் கன்னிகையை விவாகம் கொடுக்கக் கூடிய அதமகாலம 12-வது வயதென்று சொல்லுகிறார்கள். அதுதான் ருதுவயதென்றும் அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால் ரஜஸ்வலை யென்ற பேரானது 2-வருஷத்துக்கு முன்னமே வந்து விடுகிறது. மனுவின் அபிப்பிராயப்படி அதுதான் ஒரு கன்னிகையின் விவாகத்துக்கு ஏற்பட்ட சாதாரண வயது ருதுவானபின் 3-வருஷத்துக் குள்ளாக பிதா கன்னிகையை விவாகம் செய்து கொடுக்கலாம் என்றும் அதற்குப்பிறகு கன்னிகை சுயம்வரம் செய்து கொள்ளலா மென்றும் அதில் தனக்காவது தன் புருஷனுக்காவது தன் சந்ததிக்காவது யாதொரு தோஷமும் இழிவும் நேரிடாதென்றும் **மனு** விதிக்கிறார். இப்போது நாம் கவனிக்கத்தக்கது என்னவென்றால் 8 முதல் 10 வரை சரியான வயது. 11-ல் ஒன்றும்

சொல்லவில்லை. 12. கடைசி பக்ஷம். ஆனால் அது நிரம்ப ஆபத்துக்குள்ளானதாயிருக்கிறது.

8—9—10 - வது. அதற்குப்பிற்பட்ட வயதுக் குரியபேர்களான கவுரி, ரோஹிணி, கன்னிகை, ரஜஸ்வலை என்ற பெயர்களை நாம் கவனிக்க வேண்டும். இவைகளை விதிக்கின்ற சுலோகமே கன்னிகையின் தலைவிதியைக் காட்டுகின்ற சுலோகமாம். ஆஸ்தீக இந்துக்களில 100-ல 99 பேர் கன்னிகையின் விவாக காலத்தைக்குறிக்கச் சாஸ்திரத்தின் பரமதாத்பரியத்தையுடையதாக இந்தச் சுலோகத்தைத்தான் சொல்லுவார்கள். வியாக்கியாதாக்களும இந்தச் சுலோகத்திற்கு வேதவசனத்தைப்போல கவுரவம வைத்து இருக்கிறார்கள். மனு முதலான பிராசீன ஸ்மிருதி கர்த்தாக்களின் அபிப்பிராயத்தையும் இந்தச் சுலோகத்திற் கிணங்கும்படியாகச் செய்திருக்கிறார்கள். இந்தச் சுலோகமானது 3 ஸ்மிருதிகளில தானுளளது. **யமர் பராசரர் - சம்வர்த்தர்.** முன் சொலலப்பட்ட பேர்களில் யாதொரு குற்றமுமில்லை. கவுரி - யென்றால வெண்மை. ரோஹிணி - சிவப்பு. கன்னிகை - யென்றால் புருஷ சம்பர்க்கமில்லாதவள். ரஜஸ்வலை-யென்றால் ருது ஓட்ட முளளவள். முதல 3-ல பின்ன நன்மையும் கடைசியதில் பின்ன தீமையும் ஏற்படுகிறதோ நாம் அறியேம். முதல் 3-ல் நன்மையின் தாரதம்மிய மென்ன? இந்தச்சங்கேதப்பெயர்களினால் ஏற்படும் பொருத்தமும் பிரயோஜனமும் இன்னதென்று விளங்கவில்லை. ஸ்மிருதிகளிலும் இவைகளைப்பற்றித்

தேடிப்பார்த்தால் வீணே. ஆனால் இந்தச் சங்கேத மொழிகளைப்பற்றி மேற்கண்ட கிரந்த கர்த்தர்களாரே னும் யாதொரு விவரமும் சொல்லவுமில்லை. அவை களை அவர்கள் மேற்படி சங்கேத அர்த்தத்தில் அவர்களின் ஸ்மிருதிகளில் முன்னும் பின்னும் உபயோகித்தவர்களில்லை. இந்த வார்த்தைகளுள்ள சுலோகத்திற்கு முந்திய சுலோகத்தில் 12 வய துள்ளவளை (ருதுவாயிருக்கலாமென்று நினைக்கக் கூடியதாயிருக்கிறவளை) கன்னியா என்று யமர் பிரஸ் தாபிக்கிறார். அடுத்த பின் சுலோகத்தில் "ரஜஸ் வலையாகிய கன்னிகை" என்று சொல்லுகிறார். இரண்டு வார்த்தைகளையும் சாதாரணமாக வழங்கும் அர்த்தத்தில் உபயோகிக்கிறார். அவ்விதமாகவே, மேற்படி சங்கேதமான வார்த்தைகளையும் அவைக ளின் விவரணங்களையும் சொன்னபிறபாடு பராசரரும் 12 வயதுள்ளவளைக் கன்னியா என்றும் ரஜஸ்வலை யாகிய கன்னிகை யென்றும் வார்த்தைகளை உபயோ கிக்கிறார். அம்மாதிரியாகவே சம்வர்த்தரும் 8 வயது ள்ளவளைக் கன்னிகை என்று பிரஸ்தாபிக்கிறார். இந்த வார்த்தைகளை யாதொரு வியவஸ்தை யன்றி உபயோ கிக்கிறதைப் பார்த்தால இவர்களுடைய ஸ்மிருதிகளி லிருந்து மேற்படி சுலோகத்தை யெடுத்துவிட்டால் மேற்படி ஸ்மிருதிகளுடைய தாத்பரியமும் சாரமும் வசனங்களுடைய கோர்வையும் கொஞ்சமேனும் மாறாது. ருதுவான பின் விவாகம செய்யக்கூடா தென்பதற்கு ஏற்பட்ட பொது ஜனகக்ஷி யெல்லாம்

இந்தச் சுலோகத்தின் தலையிலேயே சுமந்திருக்கிறது. தனி சுலோகங்களை எழுதியிருக்கின்ற ஒருவர் இந்த சங்கேதவார்த்தைகளின் பிரயோஜனத்தை ஒரு விதமாய்ச் சொல்லியிருக்கிறாரென்று ஒருகால பிரஸ்தாபிக்கலாம். ஆனால் அது சரியான சமாதானமன்று 57 "கவுரியை விவாகம் செய்து கொடுக்கிறவன் நாகலோகத்தை (இந்திரலோகம்) அடைகிறான். ரோகிணியைக் கொடுப்பவன் வைகுண்டத்தையும், கன்னிகையைக்கொடுப்பவன் பிரஹ்மலோகத்தையும், ரஜஸ்வலையைக் கொடுப்பவன் நரகத்தையு மடைகிறான்." கன்னிகையை விவாகம் செய்து கொடுப்பதைப் புதுமாதிரியான நோக்கத்துடன் கவனிக்கிறோம். ஆனால் அது பழைய மாதிரிதான் என்று அபிப்பிராயப்படும் பக்ஷத்தில் அதில் அருவருப்பான விருத்தியம்சம் சேர்ந்திருக்கிறது. இப்போது என்ன ஏற்படுகிறதென்றால் கன்னிகாதானம் பண்ணுவதின் முக்கிய கருத்து கன்னிகையின் க்ஷேமத்தை யுத்தேசித்தன்று என்றும் பிதாவின் மறுமைப்பயனை யுத்தேசித்து என்றுமாம். பலவஸ்துக்களைத் தானம்செய்து புண்ணியம் பெறுவதுபோலக் கன்னிகையின் தானம் செய்து புண்ணியம் பெறுதலாம். சம்வர்த்தர் சீதகாலத்தில் பிராமணர்களுக்குச் செய்கிற தானங்களில் கன்னிகையும் ஒரு தானமாகச் சொல்லி

---

57. गौरीं ददन्नाकपृष्ठं वैकुण्ठं रोहिणीं ददत् । कन्यां ददद्ब्रह्मलोकं रौरवं तु रजस्वलाम् ।

யிருக்கிறார். விறகு, மருந்துச சரக்குகள், மருந்து எண்ணெய்கள், கன்னிகை, எண்ணெய், பசுக்கள் முதலியன. இப்படிச் சேர்ப்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. இயற்கையாய்ப் பெற்றோர்களுக்கு இருக்கும் பிரியம் அற்றுப்போனால் முன் பிரஸ்தாபித்திருக்கிற அப்பிராயம் நடைபெறுமாகில் விவாகமில்லாத கன்னிகைகளின் கதி விபரீதமாகவே முடிந்திருக்கும். பாலியத்தில் விவாகம் செய்யவேண்டுமென்றும் வயதான பின் விவாகம் செய்தல் தோஷத்துக்குள்ளாகுமென்றும் சொல்லுகின்ற மரீசியினுடைய வாக்கியமானது உள்ளபடியே அர்த்தம் செய்யத்தக்கதில்லை. அதின்படி 10-11 வயதில் ஒரு பெண்ணை விவாகம் பண்ணிக்கொடுத்தால் பிதா நாகத்தை அடைகிறான். ஆனால் **யம—பராசரர்**கள் 12 வயதான பின் பிதா கன்னிகையை விவாகம் செய்து கொடுக்கத் தவறினால்தான் இந்தக் கதி கிடைக்குமென்று வியக்தமாய் விதித்திருக்கிறார்கள். ஆகையால் இந்த **மரீசி** சுலோகம் நிச்சயமாய் அர்த்த வாதமேயாகிறது. அந்தச் சுலோகத்தை விலக்கினால் கவுரி, ரோகிணி என்பவளின் தானத்தை அங்கீகரிக்கின்ற ஆதார வசனங்கள் இம்மூன்று ஸ்மிருதிகளிலும் என்ன இருக்கின்றன? ஒன்றுமில்லை. **சம்வர்த்த** ஸ்மிருதியில் கடை சிவரியில் 8-வயதுள்ளவளைத் தானம் செய்தல் உயர்ந்ததென்று சிலாகிக்கப்படுகிறது. இதைத் தவிர வேறொன்றுமில்லை. இதினால் நாம் ஊகிக்கக் கூடியதென்னவென்றால் ரோகிணியின் தானமானது அடுத்த படியென்றும் கன்னிகையின்

தானம் அதற்கடுத்த படியென்றும் ஏற்படுகிறது. இது வும் ஒரு விநோதமான ஊகமே. வேதத்திலும் கர்ம சம்பந்தமான புஸ்தகங்களிலும் ஸ்மிருதிகளிலும் விவாக காலத்தில் பெண்ணைக் கன்னிகை யென்றும் பெண்ணின் தானத்தைக் கன்னிகாதானமென்றும் சொல்லுகிறது. கன்னிகையின் தானமானது முக்கிய பக்ஷமாய் 3-வது ஆகவும்பலனை உத்தேசித்துக் கடை சியதாகவும் சொலலப்படுகிறது. இந்து அசந்தர்ப்ப மாகச் சில கிரந்த கர்த்தாக்களுக்குத் தோன்றியது. ஆதினல் இநத வசனத்தை ஆதாரமாகச் சொல்லு கின்ற இடங்களில் கவுரி, என்ற வார்த்தைக்குப் பரி யாய பதமாக உபயோகிக்கப்பட்டு வந்திருக்கிறது. முக்கியமாய் ஸ்மிருதி **ரத்நாகர** மென்ற புஸ்தகத்தில் பார்க்கலாம். வேறு அர்த்தங்களுமகூட அதற்குண்டு. **கோஹில புத்திரா**, கவுரி, என்ற பதத்தை ருதுவாகாத பெண்ணுக்கு உபயோகிக்கிறார். கன்னிகையை, ரகசிய ஸ்தானத்தில் மயிரிலலாதவளுக்கும்; ரோகிணியை, ருதுவானவளுக்கும்உபயோகிக்கிறார்.**விவாகதத்துவார்ன** வத்தில் **கசியபர்** அடியில்வருமாறு சொல்லுகிறதாகக் கண்டிருக்கிறது. [58]. "8 வயதுப்பெணணுக்குக் **கவுரி** யென்றும் 10-வயதுள்ளவளுக்கு **நாக்நிகா** யென்றும் 12 வயதுள்ளவளுக்கு **கன்னியா** யென்றும் அதற்கு மேற்பட்டு ரஜஸ்வலாயென்றும் சொல்லப்படுகிறது.

---

58. **अष्टवर्षा भवेद्गौरी दशवर्षा तु नग्निका । द्वादशे तु भवेत्कन्या अतऊर्ध्वं रजस्वला ॥**

ஸம்ஸ்கார ரத்னமாலா என்ற கிரந்தத்தில் **தேவலர்** வாக்கியமென்று ஒரு விஸ்தாரமான வாக்கியம் அடியில் வருமாறு கண்டிருக்கிறது. [59]. ஏழு வயதுள்ள பெண்ணுக்கு கன்னிகா என்றும் 18 வயதுள்ளவன் சாஸ்திரோக்தமாக அவளைக் கலியாணம் பண்ணிக் கொண்டால் சந்தோஷத்தை உலகத்திலடைவான். 8 வயதில் கௌரியாகிறாள். 25 வயதுள்ளவனை விவாகம் செய்துகொண்டு அநேகம் பிள்ளைகள், பேரன்மார்களுடன் வாழ்வாள். 9-வது வயதில் ரோகிணியென்ற பெயர். ப்ரமாணமான ஐசுவரியத்தையடைவாள். தன்னுடைய இஷ்டமெல்லாம் நிறைவேற வேண்டுமென்ற எண்ணமுள்ள அறிவுள்ள புருஷன் அவளை விவாகம் செய்துகொள்ளவேண்டும். 10-வயதுக்கு மேலும் ருது காலத்திற்கு முன்னும் அவளுக்குக் காந்தாரியென்று பெயர். தீர்க்காயுளை இச்சிப்பவன் அவளை விவாகம் செய்யவேண்டும். ஆகவே 7 முதல் 12 வயது வரையுள்ள கன்னிகை ருதுவாகவுமிருக்கலாம். இப்படி மனதை மயக்கக்கூடிய பல விதமான தாத்பரியங்களை அனுசரிப்பதைவிட கன்னிகையின் பொதுவான ஆதாரத்தை அங்கீகரித்தல் நலமன்றோ? வேதத்தில் இந்த வசனமிருக்கிறது.

---

59. सप्ताब्दा त्कन्यकानाम्नी शैशवी स्याच्छुभान्विता ।
तामष्टादशवर्षीयो विवहेद्विधिवत्पुमान् ॥
या ऽष्टवर्षा भवेद्गौरी पुत्रपौत्रप्रवर्धिनी ।
पञ्चविंशतिवर्षीयस्तां कन्यामुद्वहेद्द्विजः ॥

'(अर्यमणं नु देवं कन्या अग्निमयक्षत) அதின் அர்த்தம்:— கன்னிகைகள் ஒரு காலத்தில் அக்கினி தேவதையைப் பிரார்த்தித்தார்கள். இதை ஆதாரமாக வைத்துக்கொண்டு பாணிக்கிரகண சம்பந்தமான மந்திரங்கள் கன்னிகைகளுக்குத்தான் பொருந்துமென்றும் கல்யாணமானவர்கள் அல்லது புருஷ சம்பந்தப்பட்டவர்களுக்குப் பொருந்தாதென்றும் மனு சொல்லுகிறார்[60]

---

மனு அத்தியாயம் 8. ஸ்லோகம் 226.

60 रोहिणी नववर्षा स्याद्धनधान्यविवर्धिनी ।
तामुद्वहेत मतिमान्सर्वकामार्थसिद्धये ॥
ऊर्ध्वं दशाब्दा याया कन्या प्राग्रजोदर्शनात्तु सा ॥
गान्धारी स्यात्समुद्वाह्या चिरं जीवितु मिच्छता ॥

வேதங்களிலும் ஸ்மிருதிகளிலும் கன்யா, என்பதின் பிரயோகங்களைப் பற்றி முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. **கனீன** என்ற வார்த்தையை **கன்யா** என்பதிலிருந்து உண்டானதாக **பாணினி** அபிப்பிராயப்பட்டு **கன்னியா** என்பதற்குப் புருஷனுடன் சேர்ந்து குழந்தையைப் பெற்றவளா யிருந்தாலும் விவாகமில்லா திருந்தால் அவளைக் கன்னியையென்று சொல்லுகிறார். **பதஞ்சலி** விவாகமாகாதவளும் ருது சாந்தி யாகாதவளுமாக இருப்பவளைக கன்னிகை யென்று சொல்லுகிறார்[61]. எந்த வழியை வைத்துக்

---

61. कन्यायाः कनीनच

कन्याशब्दो ऽयं पुंसा अभिसंबन्धपूर्वके संप्रयोगे निवर्तते । याचेदानीं प्रागभिसंबन्धा त्पुंसासहप्रयोगं गच्छति तस्यां कन्याशब्दो वर्तत एव (Patanjali) । शास्त्रोक्तो विवाहो ऽभिसंबन्धः (Kaiyata)

கொண்டாலும் சரி, ருதுவாகாத பெண்ணுக்கும் ருதுவான பெண்ணுக்கும் கன்னிகை யென்ற பதம் பொருந்தும் அர்த்தம் ஆகுமாகச் சொல்லப்படுகின்ற இந்தச் சுலோகங்களைப் பற்றி இதுவரை பிரஸ்தாபித்தது போதும். இதின் பின்பு விபரீத வியாக்கியானங்களைப் பற்றிய பேச்சை நிறுத்துவோம்.

**பராசரரைப்** பற்றி ஒரு விஷயம் கவனிக்கத்தக்கது. **மனு** ஸ்மிருதியிற் சொல்லாத ஒழுங்கு முறைமைய பிரகிருதி சகாதி விஷயப் பற்றிச் சொல்லாத போதிலும் இந்தக் கலியுகத்திற்கு இவர்தான் முக்கியஸ்மிருதி கர்த்தரென்று மதிக்கப்பட்டிருக்கிறார். இந்த அபிப்பிராயம் அவர் புஸ்தகத்திலுள்ள ஒரு சுலோகத்தையே ஆதாரமாயுடையது. அந்தச்சுலோகம், 62. இவருடையதோ அல்லது அவருடைய முக்கிய அபிமானிகளுடையதோ எப்படியிருந்தாலும் சரி, பொதுவாய இந்த அபிப்பிராயம் வழங்குகிறது. இந்த அபிப்பிராயத்தின் உட்கருத்தென்னவென்றால் **மனு கௌதமர் சங்கலிகிதர்கள்** காலங்களுக்குப் பிறகு விவாகவிஷயத்தில் அனுஷ்டானத்தில் உண்டாயிருக்கின்ற மாறுதல்களைச் சேர்த்து அவருடைய **ஸ்மிருதியில்** சொல்லியிருக்கிறார் என்பதாம். ஆனால் இந்த மாறுதல்களை உத்பத்தியாக்கினதே அவர் என்பது பொதுவான அபிப்பிராயம். அதினால்

62. कृते तु मानवाः प्रोक्ता स्त्रेतायां गौतमाः स्मृताः। द्वापरे शङ्खलिखितौ कलौ पाराशराः स्मृताः॥

ஞான் புனர் விவாஹ சம்பந்தமான வழக்கத்தைப் **பராசரர்** ஆதரித்தார். ஆனால் அவர் காலத்திற்குப் பிறகு அதின் அனுஷ்டானம் நின்றுவிடவே அவருடைய ஸ்மிருதி வியாக்கியானதாவான **மாதவா** புனர் விவாஹத்தைப் பற்றிய **பராசர**ருடைய ஆதரவான வாக்கியமானது யுகாந்தர விஷயமென்று சமாதானம் சொல்லியிருக்கிறார். அதற்குப் **பராசர** ஸ்மிருதியில் ஆதாரம் கிடையாது. இப்போது மனுவைத்தள்ளிய **பராசரஸ்மிருதியை** ஆதாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவருடைய வாக்கிய மருந்துபோலச் சுககரமானதென்று சொல்லப்பட்டிருக்கிறது [63]. **பிருகஸ்பதியும்** மனுவைப்பற்றி இப்படியே சொல்லுகிறார் [64]. “**மனு** வேதத்தின் உபதேசத்தைச் சங்கிரகித்துச் சொல்லியிருப்பதால் அவரே முதன்மையான ஆதாரம். அவருடைய அபிப்பிராயத்திற்கு விரோதிக்கிற எந்த ஸ்மிருதி வசனமும் அங்கீகரிக்க யோக்கியதில்லை.” **மனு**வைப்பற்றிய இவ்வுயர்வான சாக்ஷியத்திற்கு விரோதமாக **மனு**ஸ்மிருதியானது பண்டைக் காலத்துக்கு ஏற்பட்டதென்றும் அஃது இக்காலத்து அனுஷ்டானத்திற்கு ஒவ்வாததென்றும் அவா ஸ்தானத்தில் **பராசர**ருடைய வாக்கியத்தின் ஆதாரத்தின் பேரில் அவருடைய ஸ்மிருதி கலியுகத்திற்குள்ள

---

63. **यन्मनुरब्रवीत्तद्भेषजम् ।**

64. **वेदार्थोपनिबन्धृत्वात्प्राधान्यं हि मनोः स्मृतम् । मन्वर्थविपरीता या सा स्मृतिर्न प्रशस्यते ॥**

ஆதாரமென்றமை உயர்வுபடுத்திச் சொல்லுதல் ஆச்சரியமா யிருக்கிறது. அதனால் தான் வியாக்கியாதா **மாதவரும்** பராசரருடைய உயர்வான பதவிக்குக் காரணங்களை யெடுத்துக்கூற நிரம்ப சிரமப்படுகிறார். தமக்குத் தோன்றிய இடங்களில பராசரர் அபிப்பிராயத்தை அங்கீகரியாமல் யுகாநதிர விஷயமென்று தள்ளியும் போடுகிறார். பராசரருடைய உயர்வு விஷயமாக இவர் சொல்லுகிற அற்புதமான வாதமாவது[65]. **பராசரருடைய** உயர்வைப் பற்றி வேதத்தில் சொல்லவில்லை யென்பது நிஜமே. ஆனால் அதே வேதத்தில் **பராசருடைய** புத்திரன் **வியாசர்** சொன்னார் என்றிருக்கிறது **பராசருடைய** புத்திரனா யிருப்பதாலதான் **வியாசரை** வேதத்தில கவுரவத்துடன் பிரஸ்தாபித்தது. பராசருடைய புத்திரனா யிருக்கிற காரணத்தினால வியாசருடைய மகிமை வேதத்தில புகழப் பட்டிருக்கின்றது அன்றோ? அதைவிட பராசரின் மகிமை விசேஷத்தைப்

---

65. अस्तुवाकथञ्चिन्मनुस्मृतेः प्रामाण्यम् । तथाऽपि प्रकृतायाः पराशरस्मृतेः किमायाततेन । नहि मनोरिव पराशरस्य माहिमानं कश्चिद्वेदः प्रख्यापयति । तस्मात्तदीयस्मृतेर्दुर्निरूपं प्रामाण्यम् । उच्यते । न च पराशरमाहिम्नो ऽश्रौतत्वम । सहोवाचव्यासः पाराशर्य इति श्रुतौ पराशर-पुत्रत्व मुपजीव्य व्यासस्य स्तुतत्वात् । यदा सर्वसंप्रतिपन्नमहिम्नो व्यासस्यापि स्तुतये पराशरपुत्रत्व मुपजीव्यते तदा किमुवक्तव्यमचिन्त्यमहिमा पराशर इति । तस्मात्पराशरोऽपिमनुसमानएव । एष एवन्यायो वसिष्ठात्रियाज्ञयवल्क्यादिषुयोजनीयः ।

பற்றிச் சொல்ல வேண்டுமோ? ஆகையால் மனு வைப்போலவே பராசரரும் சமத்துவமான கவுரவ முள்ளவர். வஸிஷ்டர்-அத்ரி-யாக்ஞவல்கியர் முதலிய வர்களைப்பற்றியும் இந்த நியாயம் பொருந்தும்." ஆகவே மாதவர் அபிப்பிராயப்படி பேர்களின் ஒற் றுமையால் வேதத்தில் சொல்லியிருக்கிறவர்களும் ஸ்மிருதி கர்த்தர்களும் ஒரே ரிஷிகளென்று ஏற்படு கிறது தவிரவும் யாதாமொரு பேர்போனவரை இன்னார் இன்னார் புத்திரர் என்று சொன்னால் அன்னார் அவரைவிட உயர்வானவரென்று மதிக்கப்படுவாராம். மனுஸ்மிருதிக்கு மேலாகப் பராசரஸ்மிருதியைக் கொள்ளவேண்டு மென்று ஒருகால் ஒப்புக்கொண்டா லும் வேதத்திற்கு மேலாக அவர் அபிப்பிராயம் எப் படி அங்கீகரிக்கத்தக்கது. அவரோ கலியுகத்திற்கு மட்டுமே ஏற்பட்டவர். வேதமோ நித்தியமானது.

கலியுகத்திற்குப் பிரத்தியேகமான விதி யேற்பட வேண்டுமானால் அந்த விதிகளை யந்த நோக்கம் பற்றி இருக்கவேண்டும். புராணங்களில் ஈசுவர பக்தி யில் லாமையும், வர்ணசங்கரமும், பலவித அக்கிரமச்செய் கைகளும், அனுஷ்டானங்களும், இனி வரப்போகின்ற னவென்று சொல்லியிருக்கிறது. யக்ஞங்கள், விருதங் கள், தபசுகள் இவை யெல்லாம் குறையுமென்றும் இனிவரவர அவைகளை அனுஷ்டிப்பது சிரமமென்றும் விமோசனத்திற் கிடமில்லாமல் மனிதர்கள் அக்கிர மஸ்தர்களாவார்க ளென்றும் சொல்லி யிருக்கிறது. அதனால்தான் மோக்ஷமடையும் மார்க்கத்தை இந்த

யுகத்தையுத்தேசித்து நிரம்ப லகுவாக ஏற்படுத்தினார் என்றெண்ணப்படுகிறது. சீர்கேடான இக்காலத்தில வேதமார்க்கம் கஷ்டமாயிருப்பதை யுத்தேசித்து ஜீவாத்துமாக்களுக்குக் குறுக்குப்பாதை யொன்று ஏற்பட்டது. மேன்மேலும் அதிகப்பட்டு வருகிற ஒருவகை பகவத்கோடிகளின் அபிப்பிராயத்தில் நாமசங்கீர்த்தனையே போதுமானது. கலியை யுத்தேசித்துப் பக்தி மார்க்கம லகுவாகவும் நியமங்கள குறைவாகவுமிருத்தல் நலமென்று நினைக்கிறபடியால் ஜனங்களுக்குள விவாக முதலிய சம்பந்தப்பட்ட ஆசாரங்கள கடினமாயும கடுமையாகவும இருக்கவேண்டிய தென்ன? இக்காலத்திலுள்ள நமது மனச்சோர்வுக்கும் பலவீனத்திற்கும்தக்கபடி நம்முடைய விவாஹசம்பந்தமான விதிகளும் ஒத்துவர வேண்டுவதல்லவா? அவைகள சம்பந்தமாக நிர்ப்பந்தங்கள அதிகமாகக் குறைபட வேண்டுமல்லவா? மேலும இந்தியாதேசமானது உலகத்தினுடைய பொது வாழ்வில அதிகமாகச் சம்பந்தப்பட்டுவருகின்றது. அதனுடைய உயர்வான ஞானமுறைகளும் நீதிமுறைகளும நிலைக்க வேண்டுமானால அத்தேசத்தியர்கள தாங்கள உயிர்தப்பி வாழ்தலுக்குரிய தேகபலமுள்ளவர்களா யிருத்தல் வேண்டும். அவர்கள சரீரபலமும் பொறுமையும் தீரத்தன்மையும் சோர்வடையாத விரக்தியும் பெரிய சிந்தையும் திருப்தியும இருத்தல் வேண்டும் இவைகள் நம்மிடத்திலிருத்தல வேண்டுமென்று கலிபுருஷன் சொல்லுகிறான். இத்தகைய தர்மங்களைப் பராசரர் பரியாலோ

சனை செய்திருப்பாரானால் சிறுவயதிலேயே விவாகம செய்துகொள; ரசமற்ற வாழ்நாளைக்கழி; ஆற்பாயுசாக மாண்டுபோ என்று நமக்குபதேசித்திருக்க மாட்டார்.

கலியுகத்தில வர்ஜிக்கவேண்டியதென்று பல பெரியோர்களால ஏற்பட்டுள்ள ஜாபதா விவாகத்தில் ருதுவானபின் விவாகம் ஒன்றும ஏற்படவில்லை. இது கவனிக்கத்தக்கது[66]. விலக்கப்படவேண்டிய ஆசாரங்கள் விலக்கப்படாமல் அநுஷ்டானத்திலிருக்கின்றன. அதற்குக் காரணம் இக்காலத்தில ஏற்படுகிற ஆலசியமும் ஜனங்களுடைய ஆசைப் பெருக்கமும் அது போலப் பின்னும சில காரணங்களுமாம இவைகள சாஸ்திரத்தை மேற்கொண்டுவிட்டன. சிறுவயதில

66. The following extracts are from the *Smrtiratnakara*

दीर्घकालं ब्रह्मचर्यं धारणं च कमण्डलोः । गोत्रान्मातृसपिण्डात्तु-विवाहो गोवधस्तथा । देवराच्च सुतोत्पत्तिर्दत्ताकन्यानदीयते ॥

नयज्ञेगोवधः कार्यः कलौ च न कमण्डलुः ॥ ऋतुः ।

ऊढायाः पुनरुद्वाहं ज्येष्ठांशं गोवधंतथा । कलौ पञ्च न कुर्वित भ्रातृ-जायां कमण्डलुम् ॥ Adi Purana.

दत्ताक्षतायाः कन्यायाः पुनर्दानं परस्य च । समुद्रयानस्स्वीकारः क-मण्डलुविधारणम् ॥—स्मृत्यर्थसारः ।

समुद्रयात्रास्वीकारः कमण्डलुविधारणम् । द्विजाना मसवर्णासु कन्या-सूपयमक्रिया ॥ देवरेणसुतोत्पत्तिः मधुपर्के पशोर्वधः । मांसदानं तथा श्राद्धे वानप्रस्थाश्रमस्तथा ॥ दत्ताक्षतायाः कन्यायाः पुनर्दानं परस्य च । दीर्घकालं ब्रह्मचर्यं नरमेधाश्वमेधकौ ॥ बृम्हनारदीयम् ।

விவாகம் செய்தலின் தீமைகள் தெளிவானவைகளல்ல. இனி வரப்போகின்றவர்களுடைய க்ஷேமத்தைக் கருதுகின்ற அறிவுள்ளவர்களுக்கு மாத்திரம் புலப்படும். அவர்கள்தாம் முதலில் சிந்தனைசெய்து ஜன சமூகத்தில் அபிப்பிராயத்தைப் பரவச்செய்து அதன்மேல் இந்தத் தீய அனுஷ்டானத்தைத் தவிர்க்கவேண்டும்.

## 10. புராணங்கள்

இனி புராணங்களின் கருத்தை யோசிப்போம். அவைகள் ஒரேவிதமான யோக்கியதையுள்ளவைகளல்ல. சில நவீனங்கள் அவைகளிலிருந்து ருதுவுக்கு முன் விவாகம் நித்தியமென ஆதரிக்கின்ற வசனங்களை எடுத்துக்காட்டலாம். மற்றவைகள் மனுவைப் போலப் பிராசீனமானவைகள். தர்மார்த்த காம மோக்ஷ விஷயங்களைப்பற்றி ஏராளமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறபடியால் மஹாபாரதத்தை 5-வது வேதமென்றும் சொல்லுவார்கள். க்ஷத்திரிய கன்னிகைகள் விஷய நினைவுவந்து வெகு காலத்திற்குப் பிற்பாடு விவாகம் செய்திருக்கிறார்களென்று உதாரணக்கதைகள் மஹாபாரதத்திலின்றும் அதுபோலவே மற்றக் கிரந்தத்திலிருந்தும் எடுத்துக்காட்டலாம். அந்தந்தக் கதைகளின் பெயர்களை விஸ்தரிப்பது அநாவசியம். ஆனால் இதற்கு ஆக்ஷேபனை சொல்லக்கூடும்: கந்தர்வ விவாகம் ஏற்படக்கூடிய ஜாதியாரைப் பற்றியவை என ஓர் ஆக்ஷேபனை வரலாம் அது சரியன்று (1) கந்தர்வ விவாகம் பிராமணர்களுக்கும் ஏற்பட்டதே. ஆனால் அஃது.... அவ்வளவு

சிலாக்கியமன்றென்று பாரதந்திரம் சொல்லப்படுகிறது. **கவுதமர், போதாயனர், ஆபஸ்தம்பர் வஸிஷ்டர் மனு, யாக்கியவல்கியர்,** இவர்களில் ஒருவரும் அந்த விவாகம் பிராமணர்களுக்குக் கூடாதென்று நிஷேதிக்கவில்லை. **அபரார்க்கர்** சொல்வதாவது 67. ஆசுர, கந்தர்வ, விவாகங்கள் பிராமணர்களுக்கு உயர்வாகவாவது நிஷேதமாகவாவது சொல்லப்படவில்லை. ருதுவாகி, விவாகமான புருஷனைச் சூத்திர ஸ்திரீயின் புருஷனென்று ஆங்கிரஸ், யம, பராசர, இவர்கள் நிந்திக்கின்றமையால் இவர்கள் பிராமணன் சம்பந்தப்பட்ட மட்டில் கந்தர்வ விவாகம் கூடாதென்று நிஷேதித்ததாக நினைக்கலாம். வாலிபத்திலேயே விவாகம் செய்யவேண்டுமென்று சொல்லுகின்ற மற்ற ஸ்மிருதிகர்த்தர்கள் ருதுவான பெண்ணை விவாகஞ்செய்த புருஷனை இவ்விதமாக நிந்தித்ததாகத் தெரியவில்லை. (2) விவாகக்கிரமையும் அதில் பயோகிக்கும் மந்திரங்களும் எல்லாக் கிருஹ்ய சூத்திரகாரர்களின் அபிப்பிராயப்படி சிற்சில வேற்றுமைகளோடு பிராமண க்ஷத்திரிய வைசியர்களென்ற த்விஜர்களுக்குப் பொதுவாய் ஏற்பட்டவைகள்தாம். கன்னிகைகளின் பிரஸ்தாபமில்லா சுவயம்வரம் 3 ருதுவானதின் பின் அல்லது ருதுவாகி 3 வருஷத்திற்கு மேல் சுயமாய்ப் பாத்தா தேடிக்கொள்ள ஸ்திரீகளுக்குக் கொடுக்கப்பட்ட சுதந்தரமாய் இருக்கலாமென்று மதிக்கக்கூடியதா யிருக்கிறது.

---

67. आसुरगान्धर्वौ न प्रशस्तौ ननिषिद्धौ ।

இதில் பிதா கன்னிகையைத் தானம் செய்தல் இல்லாமற்போகிறது. ராஜாக்கள் சுயம்வரத்தின் சம்பிரத்தையும் ஆடம்பரத்தையும் உத்தேசித்து கன்னிகா தானம் செய்யும் சுதந்தரத்தை வரவர நழுவவிட்டார்களென்று தோன்றுகிறது. ஆனால் அவர்கள் உலக அநுபவமில்லாத தங்கள் புத்திரிகளுடன் கூடவேயிருந்து எப்போதும் அவர்களை நடத்தி வந்திருக்கிறார்கள். இந்தக்காலத்தில்கூட தங்கள் புத்திரிகளுக்கு விவாகத்தில் தாமதம் நேரிடும் பக்ஷத்தில் 3 வருஷ விதி யிருக்கிறதென்று ரஜபுத்திரர்கள் சமாதானம் சொல்லுகிறார்கள். ஆகவே விவாஹக்கிரியைகளும் வித்தியாசங்களும் 3 வருணத்தார்களுக்கும் பொதுவாயிருந்தபோதிலும் பொதுஜன அபிப்பிராயம் உலக அந்தஸ்து (விவாகம் செய்து கொள்பவர்களின்) இது போன்றவைகளால் க்ஷத்திரியர்களுக்குள் பெரும்பாலும் சுயம் வரம் ஏற்படவும் பிராமணர்களுக்குள் சுயம்வரம் விலக்கப்படவும் நேர்ந்தது. ஆனால் க்ஷத்திரியர்களுக்கு எது நலமோ அது பிராமணர்களுக்கும் நலந்தானோ என்ற ஆக்ஷேபனைக்குச் சமாதானமில்லை. மேலும் ருதுவான பிறகும் பிராமணப்பெண்கள் விவாகமில்லாமலிருந்திருக்கிறார்களென்பதற்கு மஹாபாரதத்திலிருந்தே உதாரணங்கள் சொல்லக்கூடும். சுக்கிரனுடைய புத்திரி தேவயானை முதலில் ஒரு பிராமணப் பையனைப் புருஷனாகவரித்தாள். அவன் இணங்கவில்லை. பின்பு **யயாதி** ராஜனைப் பாணிக்கிரகணம் செய்து கொண்டாள். **பரத்துவா**ஜரின் புத்திரியாகிய **சுருவாவதி**

ரிஷிக்கு என் தபசில் பாதியைக் கொடுக்கிறேன்" இந்த் தாண்டி இரைச்சியைக் கவ்வ ஒரு மீன் வந்தது. இதற் காசைப்பட்டு ஒரு ரிஷி விழுந்திருந்தார். அவர் பெயர் **பிராச்சிருங்கவத்** (முன் சொல்லப்போகும் மீமாண்டவ்யர்). **காலவ** புத்திரர். ஒரே ராத்திரி மட்டும் சம்பந்தமான நிபந்தனைக்குட்பட்டு விவாகம் செய்துகொள்ளச் சம்மதித்தார். அந்தப்படி அங்கீகரிக்கப்பட்டது. மேனா அக்கினியை வளர்த்தார்கள். ரிஷி கன்னிகையைப் பாணிக்கிரகணம் செய்து கொண்டார். ஸ்திரீ புருஷர் களானார்கள். அன்றிரவு காலவ புத்திரருக்கு நேர்ந்த வைபவம் சொல்லிமுடியாது. சாகப்போகின்ற ஸ்திரீ யிலிருந்து, தான் மணம் புரிந்த ஸ்திரீயானவள் ரூபலா வண்ணியம் பொருந்திய யௌவனப்பெண்ணாகத் தன் னுடனிருப்பதைக் கண்டார். விடிந்தது. அவர் அற்ப சுகமும் முடிந்தது. ஒரு ராத்திரி பத்தினியாயிருந்தவள் மறுபகலில் சுவர்க்கத்திற்கு யேகினள். பாதிதபசும் சந்தோஷத்தின் விசனமான நினைப்பும் தான் அவ ருக்கு ஏற்பட்டது.

இந்தக் கதைகளால் ஒன்றும் ஸ்தாபிக்கப்படவில்லை என ஆக்ஷேபிப்போர் உண்டாகலாம். இந்தக் கதைகளை வாஸ்தவமென்று வைத்துக் கொண்டாலும் ரிஷிகளும் ரிஷி புத்திரிகளும் நேர்மையாக நடந்தார்கள் என்ப தற்கு என்ன ஆதாரமிருக்கிறது? ரிஷிகள் அடிக் கடி விதியை மீறி நடந்திருக்கிறார்கள். அவர்களு டைய தபசால் முற்றும் கெட்டுப்போகாமல் காக்கப் பட்டார்கள். ரிஷிகள் மாதிரி நடப்பது அபாயத்திற்

கிடமானது [71]. இதிகாசங்களும் புராணங்களும் எதற்கேற்பட்டன? கடினமான சாஸ்திரங்களில் விதித்த தர்மங்களை ஜனங்கள் லகுவாயும் பிரீதியாயும் தெரிந்துகொள்ளும்படி அவைகள் ஏற்படவில்லையா? அவைகளில் வருகின்ற மஹான்கள் நாம் நடந்து கொள்ள வேண்டிய உயர்வான எண்ணங்களை அவர்கள் ஒழுக்க முறையில் காட்டியிருக்கிறார்கள். கதைகளில் சேர்ந்திருக்கின்ற சம்பவங்கள் நமக்கு உபதேசங்கள் நிறைந்தவைகளாயிருக்கின்றன. தீயகாரியங்களும் அவைகளில் பிரஸ்தாபிக்கிறதுண்டு. ஆனால் அவைகள் கண்டிக்கப்பட்டிருக்கின்றன அவைகளை அனுஷ்டானத்துக்குக் கொண்டுவரக்கூடாதென்ற எச்சரிக்கையும் அங்கங்கே குறிக்கப்பட்டுள்ளன. இராமாயணம் பாரதம் இரண்டையும் வால்மீகி வியாசர் மகா ரிஷிகள் முறையே எழுதாமல் வேறு யாராவது காரியம் செய்திருக்கலாம் அல்லவாவென்று சம்வாத காலத்தில் மதிமயங்கித் தாக்ஷியாமலிருப்போமாக.

## 11 தற்கால ஆசாரம்

இப்போது நடைபெறுகின்ற ஆசாரத்தையும் வழக்கத்தையும் நாம் அறிந்தோமாகில் இன்னது தர்மம் இன்னது அன்றுவென்பது தெரியவரும். தேசாசாரம் குலாசாரம் முதலியவைகள் இருக்கின்றன. பிரகிருத விசாரணையில் ஒருசிறு இடத்தைப்பற்றிய அல்லது

---

71 दृष्टो धर्मव्यतिक्रमः साहसंच पूर्वेषाम् । तेषा तेजोविशेषेण प्रत्यवायो न विद्यते । तदन्वीक्ष्य प्रयुञ्जानः सीदत्यवरः ।—Apastamba Dharma-Sutra, Prasna 2, Patala 6, Khanda 24, Sutras 7-9

ஒரு குடும்பத்தைப்பற்றிய ஆசாரங்களை மட்டிலும் கவனிக்கால் அவ்வளவு உசிதமன்று. தேசமெங்கும் யாத்திரை சவுகரியங்களாலும் வியாபார நோக்கங்களை நாம் இப்போது கைக்கொள்வதாலும் இந்தியா தேசம் ஒரே தேசமென்றும் அதிலுள்ள பிராமணர்கள் எல்லாரும் ஒரே குடும்பமென நாம் எண்ணும்படி ஏற்பட்டு வருகிறது. வேதம் எல்லாருக்கும் பொது. விவாகக்கிரியை அதின் முக்கிய ஆசிரமாகிய தேச முழுவதிலும் ஒரேமாதிரியாயுள்ளது. உண்மையைக் கண்டுபிடிக்க முயலுவதில் இந்திய தேசத்தின் பல நாடுகளில் ஒன்றைவிட்டு ஒன்றை மட்டும் கவனித்தல் நலமன்று. இங்குமங்கும் வழங்குகிற விவாக சம்பிரதாயங்களைப்பற்றி பிரஸ்தாபித்திருக்கிறோம். அவைகளால் ருதுவானபின் சன்னிகையின் விவாகம் ஒரு காலத்தில் நடைபெற்று வந்திருக்க வேண்டுமென்றறிகிறோம். பிராமணர்கள், பிராசீனமாக ரிஷிகளின் வர்க்கத்தைச் சேர்ந்தவர்களென்று எவ்விதம் சந்ததிப்பெருமை பாராட்டுகின்றார்களோ அப்படியே வடநாட்டிலுள்ள க்ஷத்திரியர்கள் பிராசீன க்ஷத்திரிய வம்சத்தைச் சேர்ந்தவர்களென்று சுதந்தரம் பாராட்டுகிறார்கள். இந்த ராஜபுத்திரர்கள் தங்களுடைய புத்திரிகளின் க்ஷேமத்தின் பொருட்டு அவ்வூரிலிருந்த 'Col. Walter' என்பவரின் பேரைவைத்து வால்டரால் ஏற்பட்ட "ராஜபுத்திர ஹிதகாரிணிசபா" ஒன்று ஏற்படுத்தியிருக்கிறார்கள். அதின் ஒரு விதியாவது:—14-வயதுக்கு முன்னும் 20-க்கு மேலும்

ஒரு பிராயவும் புத்திரிகளுக்கு விவாகம் செய்துவைக்க கூடாது. 1902-ம் வருஷத்தில இந்த ஜாதியாருக்குள் 4407 விவாகங்கள் நடந்ததில் 147 தான் விதிக்கு விரோதமாய் நடந்தவைகள். இதினால இவ்விதியானது இக்காலத்திற் கேற்றதாக இருக்கிறதென்று தெரியவருகிறது 72. ஆரிய சமாஜ மென்ற ஒரு சங்கமுண்டு அதற்கேற்பட்டு அதில் அநேகம் பெயர் சேர்ந்திருக்கிறார்கள். சாஸ்திரத்தை ஆதாரமாகக் கொண்டு ருதுவுக்குப்பின் விவாகம் செய்யவேண்டுமென்ற விதியை அனுஷ்டானத்தில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்தியாவில இக்காலத்திய பிராமணர்களுக்குள் பிரபல சுத்தர்களாகிய கன்னிய குப்ஜ பிராமணர்கள் ருதுவுக்குமுன் புத்திரிகளுக்கு விவாகம் செய்கிறதில்லை. மலையாள நம்பூரி பிராமணர்களும் இப்படித்தான். பிந்திய இருவர்கள் விஷயமாய் நிர்ப்பந்தமான அவசியத்தை யனுசரித்து அப்படி ஏற்பட்டதென்று சிலர் ஆக்ஷேபிக்கக்கூடும். அது நிஜமே. ஆனால அதற்கு ஆதாரத்தைச் சாஸ்திரமூலமாய் ஸ்தாபிக்கிறார்கள். அதுதான் கவனிக்கத்தக்கவிஷயம். இந்த வழக்கத்துக்கு விருத்தமாக வேறு அனுஷ்டானம் மேற்படி வகுப்பாருக்குள் எப்பொழுதுமிருந்ததாகத் தோன்றவில்லை.

இக்காலத்தில் பாலியவிவாகம் பிராமணர்களுக்குள் அதிக விஸ்தாரமாக நடந்து வருகிறது. இதற்கு முக்

---

72. 1901-வருஷத்து ஜனக்கணக்கு ரிப்போர்ட்டு 1-வது பாகம் அத்தியாயம் 9 பக்கம் 443.

புருஷர்கள் அதற்குள்ளாகின்றார்கள். அஃது எப்படியிருந்தாலும் சரி. சாஸ்திரத்தை யனுசரித்து நடக்கிறதில்லை. நமக்குள் ஒவ்வொரு புருஷனும் பாபக்கிரஸ்தர்களாக ஆகின்றோம். மேற்படி விஷயங்களெல்லாவற்றையும் ஒன்றுசேர்த்து ஆலோசிப்போம். அதில் இங்குமங்கும் விட்டுப்போன அம்சங்களை நம் ஊகத்தினால் பூர்த்திசெய்வோம். இப்படிசெய்வதால் எல்லாம் சேர்ந்து முன்னுக்குப்பின் விரோதமின்றிப் பொருத்தம் அமையுமானால் அவ்வளவுதான் நாம் இதில் செய்யக்கூடியது. அந்தந்தக் காலங்களில் ஆசாரமுறையை மாற்றும்படியாகப் பல ஏதுக்கள் இருந்திருக்கின்றன. அவைகள் இன்னவைகளென்று நம்மால் இக்காலத்தில் அறியக்கூடவில்லை. முன் பின்னாய மேற்படி மாறுதல்கள் ஏற்பட்டதற்கு ஆதாரமான சமய சம்பிரதாயங்கள், நீதிமுறைகள் சிற்சிலவைகளைச் சூசிப்பிக்கலாம். இச்சிறு புஸ்தகத்தில் அவ்விதம் தெரிவித்திருக்கிறது. ஆனால் இந்த அபிப்பிராயங்கள் முன் அனுஷ்டானங்களை வைத்துக்கொண்டு நாம் சங்கல்பிக்கின்ற சமாதானங்களாக இருக்கின்றன. இதில் நாம் தவறிப்போவதற்கு இடமுண்டு

புருஷர்களைப் போலவே ஸ்திரீகளுக்கும் விவாக விஷயத்தில் ஆதிகாலத்தில் அவரவர்கள் யுக்தத்தைப் பொறுத்ததாயிருந்தது இதினால் ஸ்திரீகள் விவாகத்திற்குமுன் யுக்தா யுக்தத்தை அறியும்படி தகுந்த வயதுள்ளவர்களாயிருந்திருக்கவேண்டுமென்று தெரிய

வருகிறது. பின்பு விவாகம் ஸ்திரீகளுக்குக் கட்டாயம் வேண்டுமென்று ஏற்பட்டது மரணத்திற்குமுன் விவாகஞ் செய்துகொண்ட சுப்ரூ என்பவளுடைய கதையே அதற்குத் திருஷ்டாந்தம்[73]. இந்தக் காலத்தில் கூட நமது தேசத்தில் கன்னிகளுடைய பிணத்துக்கு அவைகளை எரித்துவிடுமுன் தாலியைக் கட்டுதல் சில ஜாதியார்களுக்குள் வழக்கமாயிருக்கிறது. ஸ்திரீகள் வயது சென்றபின்பே விவாகம் செய்தார்கள். புருஷர்களை அநேகம் தடவைகளில் சுயமாக வரித்துக் கொண்டார்கள். இப்போதுபோல விவாகக் கிரியைகளும் முக்கிய அம்சங்களில் ஒரே மாதிரியாயிருந்தன. சுப்ரூவின் கதையில் கண்டிருக்கிறபடி விவாகக் கிரியையானது ஆதியில் ஒரு நாளில் முடிந்து புருஷ சங்கமமும அன்றிரவிலேயே நடந்ததாக நினைக்கக் கூடியதா யிருக்கிறது. ஸ்திரீபுமான்கள் ஒரே படுக்கையில் படுத்துக்கொண்டு ஆனால் மூன்று நாள் பிரம்மசரிய விரதம் அனுஷ்டிக்க வேண்டிய நியமம் பின்னால் ஏற்பட்டிருக்கலா மென்று தோன்றுகிறது. எப்படியானாலும் சரி, புருஷ சங்கமம் விவாக கிருத்தியத்தின் முக்கிய அங்கமா யிருந்தது.

8 அல்லது 6 விதமான விவாகம் நடைபெற்ற காலத்தில அவைகளுக்குள் தீர்க்கமான வித்தியாசமில்லையென்று ஊகிக்கக்கூடியதாயிருக்கிறது. பணம் கொடுத்துக் கன்னியை சுவீகரிக்கிற காலத்திலும்

73. असं स्कृतायाः कन्यायाः कुतो लोका स्तवानघे । Nārada to Subhrū.

சுயம்வரத்திலும் விவாகக்கிரியைகளை அனுஷ்டித்தே யிருக்கிறார்கள்.

வரவர ஸ்திரீகள் சுதந்தரத்தை இழந்தார்கள். பிர ருடைய சம்ரக்ஷணைக்குட்பட வேண்டியதாக இருந்தது. பிதா சம்ரக்ஷணையிலிருந்து தகுந்த வயது வந்தமேல் புருஷன் சம்ரக்ஷணைக்குள்பட்டாள். அதுவே அவளுடைய ஆயுசு பரியந்தம் ஏற்பட்டகதியாக முடிந்தது. விவாகமில்லாமல் கன்னிகையாக அவளிருக்கக்கூடிய அதிககாலம் ருதுவாகி 3 வருஷந்தான். இந்த 3 வருஷகாலமானது அவளுடைய க்ஷேமத்திற்காக ஏற்பட்டது. 12 வயதில் ருதுவாய் வைத்துக்கொண்டால் இந்த 3 வருஷவரமானது அவளுடைய தேக அபிவிர்த்திக்கு அநேகமாகப் போதுமானது. பிராசீன ஆயுர்வேத சாஸ்திரியான சுசுருதர் என்பவர் அபிப்பிராயத்தில் 16-வயதுள்ள ஸ்திரீ தேகதாட்டியமும் தீர்க்காயுசுமுள்ள புத்திரரைப்பெறுவாள் என்பதாம் 74. ஸ்திரீகளுக்கு விவாகம் நிர்ப்பந்தமாகவும் பையன்களுக்குத் தன்னிஷ்டமாகவும் ஏற்பட்டு விட்டபடியால் சரியான வரனைத் தேடப் பிதாக்கள் முயற்சித்தார்கள். ஒருவருக்கொருவர் உனக்குமுன் எனக்குமுன் என்று போட்டிபோடும்

---

74. पञ्चविंशे ततो वर्षे पुमान्नारीतु षोडशे । समत्वागतवीर्यौ तौ जानीयात्कुशलो भिषक् ॥ ऊनषोडश वर्षाया मप्राप्तः पञ्चविंशतिम् । यद्याधत्ते पुमान्गर्भं कुक्षिस्थः स विपद्यते ॥ जातो वा न चिरञ्जीवेज्जीवे द्वादुर्बलेन्द्रियः ॥

படி ஆகிவிட்டது. விவாக சம்பந்தங்களில் வரவரக் கட்டுப்பாடுகளும் நிபந்தனைகளும் அதிகரிக்கவே முன் சொன்ன போட்டியானது அதிகக்கொடுமையாக ஏற்பட்டது. விவாகமாகக்கூடிய பையன்கள் குறைவாகவும் பெண்கள் அதிகமாகவும் ஏற்படவே இந்தப் போட்டியின் விஷயமும் அதிகரித்தது வைதிகக்கிரியைகளில் தாங்கள் நடத்தவேண்டியதையும் நடத்திவைக்கவேண்டியதையும் உத்தேசித்து உபாத்தியாயர்களும் புரோகிதர்களும் பாலியத்திலேயே விவாகத்தை நடத்தவேண்டியதாக நேர்ந்தது. ஜனங்களுடைய எண்ணமும் விவாகத்தைப் பாலியத்திலேயே செய்யவேண்டுமென்று ஏற்பட்டது. கன்னிகைக்குள் ஒவ்வொரு ருது காலத்திலும் புருஷ சங்கமத்தால் கர்ப்பந்தரிக்கும்படியான அவகாசம் ஏற்படவேண்டுமென்ற தீய அபிப்பிராயமானது ஜனங்களின் மனத்தில் புகுந்தது.

முற்காலத்தில் பொதுவான ஸ்தலங்களில் ஸ்திரீகள் சுயேச்சையாய்ப் போகலாமென்பது இருந்தமையால் தாங்களே புருஷனை வரிக்கும்படியான சந்தர்ப்பம் ஏற்பட்டு அதினால் அதற்குரிய தீமைகளும் உண்டாயிருக்க வேண்டும். பிராமணர்கள் தங்கள் ஸ்திரீகளின் பதிவிரதா தர்மத்தைப்பற்றி அதிக சமுசயம் கொள்ளுகிறவர்கள். லோகாபவாதமான சொற்கள் பல தங்கள் காதில் படவே விவாக சம்பந்தமான நியமங்களும் நிர்ப்பந்தங்களும் ஏற்பட்டன. நம்முடைய இலக்கியங்களில் ஸ்திரீகளைப்பற்றி அவ்

தாரான கொடுமைகள் ஏராளமாயிருக்கின்றன. மனு. அத்தியாயம் 9. சுலோகம் 13 முதல் 20-யும் 2-வது அத்தியாயம் 213 முதல் 215 சுலோகங்களையும் இதற்கு அத்தாக்ஷியாகக் கூறலாம். இதுவே போதுமானது. இந்திரியர்களின் மனோபாவத்தை ஒருமைப் படுத்தியிருப்பதில் மனுவின் சக்தியும் செல்வாக்கும் அதிகமாக இருந்திருக்கிறது. ஒவ்வொரு சிராத்த காலத்திலும் ஒவ்வொரு பிராமணனும் தன்னுடைய மாதா பிதாமகி பிரபிதாமகி முதலானவர்களின் பதிவிரதா தாமத்தில் சமுசயத்தை வெளிக்கற்பித்து ஆசாரமாய வேத மந்திரத்தைச் சொல்லுகிறான். இதுவே அவர்களுடைய ஸ்திரீகளின் பதிவிரதா தாமத்தைப்பற்றிய அவநம்பிக்கைக்கு ஒரு ருசுவாக மனு சொல்லுகிறா[75]. மத ஆசாரமும்—இவ்வபிப்பிராயம

---

[75]. यन्मेमाता प्रलुलोभचरत्यननुव्रता । तन्मेरेतः पितावृङ्क्तां मा-ऽऽभुरन्योऽवपद्यताम् ॥ यद्रेतः अन्यदीयं मेमम माता भर्तुः अननुव्रता अननुकूला चरती चरन्ती प्रलुलोभ प्रकर्षेण इयेष । साध्वीनामपि मान-सव्यभिचारसंभवादेवमुच्यते । तत्रेतः मे पिता वृङ्क्तां आच्छिद्यस्वीकरोतु । मानसव्यभिचारनिमित्तंरेतासिसाङ्कर्यं मा भूत् । आभवतीति आभुः एतावतानिमित्तेन मा मां प्रति पितृत्वेन आभवन् अन्यः मोघाशो भवतु यन्मयादीयमानं हविः तन्नलभताम् ।

यास्तिष्ठन्ति या धावन्ति या आर्द्रोघ्नीः परितस्थुषीः । अद्भिर्विश्वस्य भर्त्रीभिरन्तरन्यं पितुर्दधे ॥ या आपः तिष्ठन्ति तटाकादिषु याश्च धावन्ति नदीषु याश्चपरितस्थुषीः परितास्तिष्ठन्त्यः आर्द्रोघ्नीः आर्द्रोघ्न्यः भवन्ति कूलादिकमार्द्रप्रदेशोघ्नन्तीन्यर्थः । ताभिः अद्भिः विश्वस्य भर्त्रीभिः

போனவழி, நடைபெற்றது. பிராமணர்களுக்குள், பிதிர்க்களை உத்தேசித்துச் செய்கின்ற கிருத்தியங்கள் அடிக்கடி நேர்கின்றன. வைதிக தர்மத்தில் கொஞ்சமேனும் நம்பிக்கையில்லாத தர்மபிரஷ்டனை பிராமணன் கூட, மாதா - பிதா சிராத்தத்தை விடத்துணியான் முற்காலத்தில், இக்கிரியைகளின் மேல அதிக சிரத்தையும், கவனமும் செலுத்திவந்தார்கள் என்பது தெளிவாய்த் தெரியவருகிறது. சிராத்த காலங்களில், ஒருவன் கொடுக்கும் பிண்டம், உதகம், முதலியவை அவனுடைய வெளிப்படையான பிதாவுக்குச் சேருகின்றனவில்லை என்றும்—அவன் தாயாருடைய பிரியத்தைக்கொண்ட சோர புருஷனுக்குச் சேருமென்றும் சாதாரணமாய் நினைக்கப்பட்டது 76 அதனால்

---

पितुरन्यं अस्मिन्कर्मणि भागित्वेनागच्छन्तं अन्तर्दधे व्यवहितं करोमि ॥
*Ekâgnikânda.* Haradatta softens the imputation by calling it mental unchastity. One sympathises with his motive but the context in Manu is clearly aginst the interpretation Medhatithi and Nandana give it the worse import.

In Taittiriya Brahmana, Kanda 3, Prapathaka 7, Anuvak 12, there occurs यन्मयि माता गर्भेसति । एनश्चकार यत्पिता । अग्निर्मा तस्मादेनसः । The commentary says the reference is to conjugal infidelity.

76. उत्पादयितुः पुत्र इति हि ब्राह्मणम् ।
अथाप्युदाहरन्ति ।
इदानीमेवाहं जनकः स्त्रीणामीर्ष्यामि नोपुरा ॥
यदा यमस्य सादने जनयितुः पुत्रमब्रुवन् ॥
रेतोधाः पुत्रं नयति परेत्य यमसादने ।
तस्माद्भार्यां रक्षन्ति बिभ्यन्तः पररेतसः ॥

ஸ்திரீகளின் கற்பு அதிகக்கடினமாக ஏற்பட்டது. அதனால், ஒவ்வொரு கன்னிகைக்கும், புருஷன் வேண்டுமென்ற நினைப்பு உண்டாகுமுன், ஒரு புருஷனை ஏற்படுத்தல் அவசியமாகமுடிந்தது.

இத்தகைய எண்ணங்களும் ஆசாரங்களும் ஜனசமுகத்தில் நடை பெற்றமையால். பெண்கள் இளமையாக இருக்கும் பொழுதே விவாகம் செய்யவேண்டுமென்ற வழக்கம் வரவர விஸ்தாரமாகி விட்டது. **உஷஸ்தி, சக்கிராயணர், கோபிலர், கௌதமர்** இவர்களின் அபிப்பிராயங்களும் அநுஷ்டானங்களும் இந்த வழக்கத்தின் அபிவிர்த்தி வழியில் பலதுறைகளைக் காட்டுகின்றன என்று முன்னமேயே தெரிவித்திருக்கிறோம். மனுவின் காலத்தில் இரண்டு வழக்கங்களும் (அஃதாவது ருதுவாகுமுன் விவாகம், பின் விவாகம்) ஒரே மாதிரியாக அநுஷ்டானத்தில் உள்ளன. அவர் அவ்விரண்டையும் ஆதரித்தார். ஆனால் சாதாரணமாய், புதிதான வழக்கம் மேலிடுகிறது உண்டு அன்றோ? **போதாயனர், வஸிஷ்டர்** இவர்களுடையவை என்று

---

अप्रमत्ता रक्षत तन्तुमेतं मा वः क्षेत्रे पर बीजानि वाप्सुः ।
जनयितुः पुत्रो भवति सांपराये मोघं वेत्ता कुरुते तन्तुमेतम् ॥
इति ।

Apastamba Dharma-Sutra, Prasna 2, Patala 6, Khanda 13. The dictum was not universally accepted. Vasishtha says, Ch. 17:

क्षेत्रिणः पुत्रो जनयितुः पुत्र इति विवदन्ते । तत्रोभयथाप्युदाहरन्ति । यद्यन्यो गोषुवृषभो वत्सानां जनयेच्छतम् गोमिनामेव तेवत्सा मोघंस्यन्दितमार्षभम् ॥ अप्रमत्तारक्षत, &c., &c.

வழங்கும போலி ஸ்மிருதிகள, பாலய விவாகத்தைத் அதிகமாக ஆதரித்தன. ஆனால் பழையவழக்கமான ருதுவிற்குப்பிந்தியவிவாகத்தை நிஷேதித்தார்களில்லை. சில சமயங்களில, ருதுவானபின் சுயம்வரத்தை விதித் தார்களேனும், விஷ்ணுவும், யாக்கியவல்கியரும் சரியான காலத்தில் புத்திரியை விவாகம் செய்து கொடாத பிதாவுக்குச் சாபத்தை விதித்தார்கள். நாரத ஸ்மிருதியில் பாலய விவாகம நடைபெறுகிறது. சுயம் வரம் முற்றும போயவிட்டது. பின்பு, தகுந்த வயசு வந்ததன்மேல விவாகம செயதுகொண்ட பெண்ணுக்கு இழிவும் அதின் பின்னர் அவளுக்கும் அவள புருஷ னுக்கும் சாபமும் பழிப்பும், கற்பிக்கப்பட்டது. இவ் விதமாகப் பாலய விவாக விர்த்தியாகி வெற்றிகொண் டது. பாலிய விவாகம் தலைப்பட்டவே விவாக கிருஹி யங்களில சிலமாறுதல் ஏற்பட்டது.

கோபிலர் முதலானவர்கள புருஷ சங்கமத்தை விவா கத்தின் அங்கமாக விதித்தார்கள சிலர் அபக்குவ மான ஸ்திரீகளுடன், சங்கமம்நடத்தலாமென எண்ணி அனுமதி கொடுத்தார்கள போலும். கிருகிய சூத்திரப் படி, நாலாம் ராத்திரி புருஷ சங்கமும் கூடுமென விதித்தவர்களே, 8 முதல் 12 வயசுக்குள கன்னிகை களுக்கு விவாகம் செய்தல் நலமென எப்படி விதிக்கத் துணிந்தார்களோ? ஆச்சரியம்! புருஷ சங்கமம் வேடிக்கையாக ஏற்படவே, சதுர்த்தி கர்மம் என்றது விவாகத்தின் முக்கிய அங்கமாக ஏற்பட்டது. இதை ஆதரிக்க விவகாரயுக்தியும் ஏற்பட்டது. இந்தச்

சதுர்த்தகர்மம் இல்லாவிட்டால், விவாகமில்லாத **ஸ்திரீ**யுடன் ஸங்கமம் செய்கிறதாக முடியும். **பாரஸ்கரர்** வியாக்கியாதாவின் அபிப்பிராயம் இதுவென்று முன்னமே பிரஸ்தாபித்துள்ளது. **கோபிலர்** வியாக்கியாதாவும் இந்த அபிப்பிராயத்தைச் சொல்லுகிறார். **பிருஹஸ்பதி** இன்னும் மற்றவர்களுடைய வசனங்களையும் ஆதாரமாகச் சொல்லுகிறதும் தவிர, பவதேவ பட்டரால், எடுத்து உதகரிக்கப்பட்டதான, மனுவின் ஒரு வசனத்தையும் இவர் ஆதாரமாகச் சொல்லுகின்றார்.[77] இந்த வசனம் சந்தேகத்துக்குள்ளானது. மனுவின் அபிப்பிராயம் வேறானது[78]. விவகார விஷயத்துக்காக, சப்தபதியானது, விவாகத்தின் முடிவை, அத்தாக்ஷியாகக் குறிப்பிடுகிறது என்று மனு சொல்லுகிறார். இக்காலத்திய நியாயஸ்தலங்களில் இந்த அபிப்பிராயம் இடம் பெறுகிறது.

### 12 சாஸ்திர ஆராய்ச்சியின் தீர்மானம்

இப்போது எடுத்துக்காட்டிய ஆதாரங்களின்— உயர்வு தாழ்வைப்பற்றியும் அவைகளின் தாரதம்மியத்தைப்பற்றியும் இனி ஆலோசிப்போம். அவைகளைச் சரித்திரநோக்காகப் பார்த்தோம். அதாவது— அந்தந்தச் சாஸ்திரங்கள் ஏற்பட்ட காலங்களையும் அந்தந்த

77. विवाहे चैव निर्वृत्ते चतुर्थेऽहनि रात्रिषु ।
एकत्वमागता भर्तुः पिण्डे गोत्रे च सूतके ॥

78. पाणिग्रहणिका मन्त्रा नियत दारलक्षणम् ।
तेषां निष्ठा तु विज्ञेया विद्वद्भिः सप्तमे पदे ॥ Manu Ch 8, sl 227.

தக் காலங்களுக்குரிய சம்பிரதாயங்களையும் கவனித்தோம். அந்தந்தக்கிரந்தங்கள் அததற்குரிய யோக்கியதையை வகித்துக்கொண்டிருக்கின்றன. அதில் ஒரு குற்றம் இல்லை. வைதிகர்கள் எல்லாவற்றையும், தாம சாஸ்திரமுதல் நூல்களாகவும் அதினால் உயர்வான ஆதாரங்களாகவும் மதிக்கின்றார்கள். அந்தந்தக்காலங்களில் நிகழ்ந்த ஆசாரங்களைச் சரித்திரம் போல அவைகள் குறிப்பிடுகின்றன என்று அவர்கள் நினைக்கின்றார்கள் இல்லை. இந்த அபிப்பிராயம் நியாயமே. தற்கால சட்ட புஸ்தகங்களை நாம் எவ்வண்ணம் அர்த்தம் செய்கின்றோமோ, அவ்வண்ணமே, இந்தச் சாஸ்திரங்களையும் நமக்குப்பிரயோஜனமாகும்படி, அர்த்தம் செய்ய வேண்டும். தர்ம பிரமாணங்கள்—பல பிரிவுகளாக வகுக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொன்றினுடைய அந்தஸ்தும் மரியாதையும் வியக்தமாய் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஆனால் இத்தன்மையான வியவஸ்தையானது குற்றம் என்றுதான் சிந்திக்கக்கூடியதாக இருக்கிறது: இதனால், வேதத்தின், ஒவ்வொரு பாகமும், அற்பமானதாக இருந்தாலும் கூட, உயர்வான யோக்கியதையையும், மரியாதையையும் பெறுகிறது. முன்னுக்குப் பின் விருத்தமாகச் சொல்லுகின்ற ஒருஸ்மிருதியானது, இராமாயணம், மஹாபாரதம் இவைகளை விட, உயர்வான பிரமாணமாகி விடுகிறது ஒரு வகுப்பைச்சேர்ந்த பிரமாணங்களில, அவைகளுக்குள் தாரதம்மியமும், உயர்வு, தாழ்வும் கவனிக்கிறதில்லை. எல்லா ஸ்மிருதிகளும்—ஒரே மாதிரியான பிரமாணங்

கள்தான். எல்லாப்புராணங்களும் ஒரே மாதிரியான மரியாதையுள்ள பிரமாணங்களாம். ஒன்றுக்கொன்று விரோதம் சம்பவித்தால், அதிகயுக்தியால், இரண்டும், சரிதான் எனச் சமாதானப்படுத்த முயலுகின்றார்கள். ஏனெனில் அவைகள் இரண்டும் ஒரேமாதிரியான பிரமாணங்கள் அல்லவோ? ஒவ்வொன்றும் சரிதான். அஃது அதற்கு ஒரு புகலிடம் விடுகின்றார்கள் வரி பிளந்து நூதன வசனங்கள் இருந்தாலும்—அவைகளைச் சந்தேகிக்கிறதில்லை. முந்திய வசனங்களை நவீனர்களின் அபிப்பிராயத்தைக் கொண்டு, அர்த்தம் பண்ணுகின்றார்கள். அவைகளைத் தெளிவுபடுத்த அப்படிச் செய்தால் நலம்தான். அப்படி இல்லாமல், முன்னவர்களின் விரிவான எண்ணங்களைக் குறுக்கி அர்த்தம் செய்கிறார்கள். இக்காலத்திய ஹிந்து தார்க்கிகர்கள் எது வெகுகாலம் நடந்தேறி வந்து நிலைநிற்கின்றதோ—அதை உறுதிப்படுத்த நிரம்ப சமர்த்தர்கள். எந்த அனுஷ்டானம் இக்காலத்தில் நடைபெறுகின்றதோ—அதுவே என்று முள்ளது என்பது அவர்கள் எண்ணம். ஒருவிதமாக யோஜித்தால் அது நல்லதுதான். அளவுக்கு மிஞ்சிப்போகின்றமையால் அதனால் விளையும் தீமை விசனகரமாகவிருக்கின்றது.

எல்லாத்தர்மத்துக்கும் ஆதாரம்—வேதம். அதில் (1) விதிவாக்கியங்கள். (2) அர்த்தவாதங்களான கதைகள் (3) பிரார்த்தனை அல்லது மந்திரம்—இவைகள் உள்ளன. முதலாவது உயர்ந்த பிரமாணமே; இரண்டு மூன்றாவதும் பிரமாணங்களே. ஏனென்றால்,

விதிகளின் காரணங்களைத் தெரிவிக்கின்றன. அர்த்தவாதமும் விதியும் பரஸ்பரம் ஒன்று மற்றொன்றை ஆச்ரயித்திருக்கின்றன. இரண்டும்—ஒரே அர்த்தத்தை உடையன. ஆனால் அர்த்தவாதம் பிரமாணம் அன்று என்று **தரு** என்பாரின் அபிப்பிராயம். ஆனால் இதற்கு விரோதமானது வியாசரின் அபிப்பிராயம். அர்த்தவாதத்தினின்று, விதியை அனுமானிக்கலாம் என்பது அவர் அபிப்பிராயம்[79]. இந்த அபிப்பிராயம் **பட்டர்** மதம் என்று வழங்குகிறது. கர்மகாண்டத்தை அனுசரிக்கிறவர்கள் இதை ஒப்புக்கொள்ளுகிறார்கள். எல்லாத்தர்மத்திற்கும் வேதம் முழுவதுமே முக்கிய ஆதாரமென்று மனு சொல்லுகிறார்.[80]. "முழுவதும்" என்றால், மந்திரங்கள், அர்த்தவாதங்கள் இவை இரண்டும் அடங்குகின்றன என, வியாக்கியாதாக்களான, **மேதாதிதி, ராகவானந்தர் குல்லூகபட்டர், நந்தனர்,** வியாக்கியானம் செய்துள்ளார். **மேதாதிதி**, என்பார்

---

79. *Vide* Sankara's commentary on the Sutra. भावं तु बादरायणो अस्ति हि। in देवताधिकरणम् Cf. Madhava in his commentary on Parasara-Smriti मानान्तराविरुद्धाना मननुवादिनां मन्त्रादीनां स्वार्थे प्रामाण्य मुत्तरमीमांसायां देवतादिकरणे व्यवस्थापितम्। अर्थवादाधिकरणे तु स्वार्थे प्रामाण्यनिराकरणं विरुद्धानुवादयोः सावकाशम्। अतः 'यद्वै किंच' इत्यर्थवादस्य विधिस्तावकस्य स्वार्थेऽपि तात्पर्यमस्तीति।

80. वेदोऽखिलो धर्ममूलं स्मृतिशीले च तद्विदाम्।
आचारश्चैव साधूनामात्मनस्तुष्टिरेव च ॥ Adh: 2, Sl. 6.

அவர் வழக்கபபடி, இதைப்பற்றி நீண்ட வியாக்கியா னம் செய்திருக்கிறார். ஆனல், அர்த்தவாதத்தினல் அனுமானிக்கப்படும் விதிக்கும் வியக்தமான வேத விதிக்கும், விரோதம் ஏற்பட்டால், பின்னதுதான் பிர மாணம்.

வேதத்துக்குப் பின்பு, ஸ்மிருதி பிரமாணம். வேதங் கள் கணக்கில் முடிவில்லே. அவைகளின் பாகங்கள், மறைந்தன. வேதங்களே முற்றும் உணர்ந்தவர்களான ரிஷிகள், அவைகளின் தாத்பரியங்களே ஸ்மிருதிகள் மூலமாக வெளியிட்டார்கள். ஸ்மிருதியில் ஒருவிதி இருந்து அதை நேராக ஆதரிக்கிற வேதவசனம் இப் போது இல்லாவிடில், அதுமுன் இருந்து, இப்போது மறைந்து விட்டது என்று அபிப்பிராயம்[81]. அதி ஞல் ஆதாரமான ஒரு வேதவசனம் இருந்து இருக் கிறதாக ஊகிக்கலாம். அது, வியக்தமாக இருக்கிற வேத வாக்கியத்திற்கு விரோதமாக மேற்கோளா காது. ஸ்மிருதி விதியானது ஆசை, அது போன்ற கீழான எண்ணம் காரணமாகப் பிறந்திருந்தால், அவ் விதி தள்ளத்தக்கது. வேதத்தின் வியக்தமான வசனத் துக்கு விரோதமாக ஸ்மிருதி இருக்கப்படாதென்று.

**மூன்றும் பிரமாணம்** :—புராணமாம். முந்திய இரண் டிற்கும் விரோதமில்லாதவரை—புராணம் பிரமாண மாம்.

---

81. Cf. ब्राह्मणोक्ता विधयस्तेषामुत्सन्नाः पाठाः प्रयोगादनुमीयन्ते Apastamba, Dharma, 1, 4, 12, 10.

**நான்காம் பிரமாணம்** ஆசாரம் வழக்கம் அறவோர் ஒழுக்கம், ஸ்ருதியை அனுசரித்தே இருக்கும் என்று மதிக்கவேண்டும். ஸ்ருதியோ வேதவாக்கியத்தைப் பற்றியே நிகழும். வேதத்திற்கும் ஸ்மிருதிக்கும் விரோதமாக, ஆசாரம் மேற்கோளாக ஆகமாட்டாது. இது பொதுவான கோட்பாடாக இருந்தாலும்—சாதாரணமாய், [illegible]யில், ஆசாரம் மிகப் முக்கியமான பிரமாணமாக இருக்கிறது. நம் தேசத்தின் நியாயஸ்தலங்களில் (Courts of law) இந்த அபிப்பிராயம் உறுதிப்பட்டுப் பெற்றுவருகின்றது. ஆக்ஷேபத்துக்கு இடமான காரணங்கள் பற்றி இவ்வாசாரம் இருந்த போதிலும்—அவைகள் கோர்ட்டுகளில் அங்கீகரிக்கப்படுகின்றன [82].

இச்சிறு புஸ்தகத்தில், அற்பமானது என்று எண்ணிவிடாமல், எல்லா ஆதாரங்களையும் அவைகளின் முறைப்படி பிரஸ்தாபித்திருக்கிறோம். அவைகளை ஆராய்ச்சியும் செய்தோம். விவாக கன்னிகை தகுந்த வயதுள்ளவளாக இருக்கவேண்டுமென்று தெரிவிக்கின்ற வேத ஆதாரங்கள் அனேகங்களை எடுத்துக் காட்டியுள்ளோம். அவ்வசனங்களில் அநேகம், விவாக காலத்தில் சொல்லப்படுகின்றன. அதனால் அவைகள் நிரம்பப் பொருத்தமானவைகள். கன்னிகை வாலிபமாகவும், ஆசையுள்ளவளாகவும், புருஷ சங்க

---

82 यत्तुप्रीत्युपलब्धितः प्रवृत्तिर्नतत्र शास्त्रमस्ति । तदनुवर्तमानो नरकाय राध्यति ।— Apastamba, Dharma, 1, 4, 12, 11-12

மததில அவாவுளளவளாகவும இருககிறாள என்று இநத வசனஙகள கூறுகின்றன. தமபதிகளின் ஆலிஙகனவஙகையறு சேஷ்டைகளும கூடப பசசை பசசையாகச் சொலலபபடுகின்றன. இதனால வேததகதின் நோககம கொஞசமகூட சநதேககதிறகிடமின்றித தெளிவாக இருககின்றது. ஆனால 'லலல' வினையுள்ள விதி இலலை என்று ஒரு ஆகேஷபணை சொலலலாம. "ருதுவான ஸ்திரீயை ஒருவன் விவாகம் செயயறபாலது" என்று விதி ஏற்படவிலலையே. அதைக குறிககும லிஙகம அநேகம இருககின்றன. நேரானவிதி மாததிரம இலலை. ஸ்மிருதிகளில, ருதுவான பிறகு, விவாகம நேராக நிநதிககபபடுகிறது. இநத நேரான விதிவாககியஙகள குறிபபாக ஊகிக்க கூடிய வேத வாககியஙகளை விட உயர்வான பிரமாணஙகளே. மேலும ருதுவாகாத கனனிகையை மாததிரம, ஒருவன விவாகம செயதுகொளள வேண்டுமென்று, ஸ்மிருதி வசனஙகள இருககின்றமையால, அவைகளுககு முன் வேதவிதி வாககியம இருநதிருககத்தான் வேண்டுமென்று ஊகிககபபாலது. வியக்தமாக வேதவிதி வாககியம இலலாதவரை, ஊகமான விதி வாக்கியம ஆதாரமாகவுளளது தானே. ஆம. ஆம். அதுமெய. ஆனால இநத யுகதியின் ஆதாரத்தைக் கொண்டே ருதுவான கன்னிகையை விவாகம் செய்ய வேண்டுமென்ற விதியை, அததன்மையான லிங்கங்களால் (குறிப்புக்களால) நாம் ஊகிக்கக் கூடுமல்லவா? அப்போழ்து, இதற்கு விரோதமான

ப்ரியக்ஷமான வேதவிதி இல்லாதவரையில் இந்த யூக மான விதி மேற்கோளாக அங்கீகரிக்க வேண்டுவது தானே. இருதரப்பிலும் ப்ரத்யக்ஷமான விதி எடுத்துக் காட்ட போகிறதில்லை. ஆகவே, நேர் விரோதமான யூகமான இரண்டு விதிகள் ஏற்படுகின்றன. எதை மேற்கோளாக அங்கீகரிக்க தக்கது? இரண்டும் சமம் என்றால், அவரவர் யுக்தம் அனுஷ்டானம் ஏற்படும். இவ்விதமான அபிப்பிராயமும் நமக்கு அங்கீகாரமே. ஆனால் இரண்டில் ஒன்றுக்குத்தான் உயர்வு ஏற்படக் கூடியது. ஒருவிதி வேதத்தினின்றும் மற்றொன்று ஸ்மிருதியினின்றும் யூகமாக ஏற்படுகின்றது. ஸ்மிருதிகளோ புருஷ கற்பிதம். அதனால் ஏக தேசமாகிலும் பிசகக் கூடியவை. ஒரு விதியோ, வேதத்தோடு நேர்மையாகவும் வேதத்தின் கருத்தை நிறைவேற்றுகிறதாகவும் இருக்கிறது. மற்ற விதியோ வேத மந்திரங்களின் சூசிப்பிக்கும் அர்த்தத்திற்கு பிரத்தியக்ஷ விரோதமாக விருக்கின்றது. எல்லாவற்றையுமவிட ஒன்று இங்கு கவனிக்கத்தக்கது. ஒரு விதியானது தற்கால சாஸ்திரத்தை அனுசரித்துப் பொருத்தமாகவும் நம்மவர் அபிவிருத்திக்கு ஹேதுவாகவும் இருக்கிறது. மற்ற விதியோ, சரீரசாஸ்திர விதிகளுக்கு முற்றும் மாறாகவும் நாம் க்ஷீணகதி அடைய ஹேதுவாகவும் இருக்கிறது. இரண்டு விதிகளும் சமானமான பிரமாணங்கள் என்று வாதத்திற்காக வைத்துக்கொள்ளுவோம். மேற்கண்ட சில முக்கிய நோக்கங்களையும் கருத்துக்களையும் ஆலோசித்து

